# அருள்மொழிக் கோவை

(ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் சதாபிஷேக
விழா நினைவு மலர்)



பதிப்பாசிரியர் :
சங்கரனன்பர்க்கடிமை, சாஸ்த்ர பிரசார பூஷணம்
**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
(சிவபுராண ஞான பூஜகர்)

1976

இரண்டாம் பதிப்பு] [பிரசார விலை 50 காசுகள்



जगतां गुरुवर्यश्च कामकोट्यधिपं शिवम् ।
चन्द्रशेखरयोगीन्द्र देशिकं समुपास्महे ॥

உ

சிவமயம்

# அருள்மொழிக் கோவை

(ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின்
உபதேசங்களிலிருந்து தொகுக்கப்பட்டது)

தொகுத்தவர்:

சங்கரனன்பர்க்கடிமை, சாஸ்த்ர பிரசார பூஷணம்

**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**

(சிவபுராண ஞான பூஜகர்)




பிரசுரம்:

**ஸ்ரீசங்கர பக்த ஜன சபா**

5, போஸ்டல் காலனி, குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033.

இரண்டாம் பதிப்பு] 1976 [விலை 50 காசுகள்

உ
சிவமயம்

# பதிப்பாசிரியரின் பணிவுரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளாக 68 வது பீடாதிபதிகளாகத் திகழும் ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகளை ஆதி சங்கர பகவத் பாதர்களின் அவதாரமாகவே நாம் கருது கிறோம். அவர்களுக்கு இவ்வாண்டு சதாபிஷேக விழா பக்தர்களால் அனேக இடங்களில் வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பட்டதை அன்பர்கள் அறிவார்கள். ஸ்ரீமத் ஜகத்குருவினுடைய சதாபிஷேக விழா நம் நினைவில் என்றென்றும் நிற்க ஒரு புத்தக வெளியீட்டினை வெளி யிடத் தீர்மானித்தோம். அதன் விளைவே இச்சிறிய ஆனால் சீரிய நூலாகும்.

ஆதி சங்கர பகவத்பாதர்கள் நாடெங்கிலும் திக் விஜயம் செய்து இப்பாரத மண்ணினைப் புனிதமாக்கியது போல் நமது ஜகத்குருவும் இப்பாரத வர்ஷம் முழுவதும் கால்நடையாகவே விஜயம் செய்து கோடிக் கணக்கான மக்களுக்கு அனுக்ரஹம் செய்தார்கள். ஆங்காங்கு முகாம் செய்த இடங்களிலெல்லாம் அருள்மொழிகளை வழங்கினார் கள். சென்னையில் 1932-33 ஆண்டுகளிலேயும் 1957 முதல் 1959 வரை முகாம் செய்திருந்த போதும் பல இடங்களில் பக்தர்களுக்கு பல அரிய விஷயங்களை உபதேசம் செய்தார் கள். அவ்வரிய உபதேசங்களை மிகவும் சிரத்தையுடன் சேகரித்து ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கலைமகள் காரியாலயம், கணேஷ் அண்டு கம்பெனி ஆகியோர் அழகிய புத்தக வடிவத்தில் வெளியிட்டனர். அந்நூல்களிலிருந்து 101 அருள் மொழிகளைத் தொகுத்து 'அருள்மொழிக் கோவை' என்னும் பெயரில் இந்நூல் வெளியிடப்படுகிறது.

இந்நூலிலுள்ள அருள்மொழிகளைப் படிப்போர்க்கு ஆசாரிய சுவாமிகளின் முழு உபதேசங்களையும் படிக்க

வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகி, அதன் மூலம் ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகளின் உபதேசங்களை அனைவரும் படிப்பார்கள் என்று நம்புகிறோம். முழு உபதேசங்களையும் ஏற்கெனவே படித்தவர்களுக்கும் கூட இவ்வருள்மொழிக் கோவை படிக்குந் தோறும் புதியதொரு நூலாகவே தோன்றும் என நம்புகிறோம். ஏனெனில் இவை ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகளின் அருள் வாக்குகள் அல்லவா ?

நமது வைதிக மதத்திற்குப் பிரமாணமான 'ச்ருதி' ஸ்ம்ருதி, புராண, இதிஹாஸங்களிலுள்ள பல அரிய நுட்பமான விஷயங்களை ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகள் சாஸ்த்ரப் பயிற்சி இல்லாதவர்களும் கூட புரிந்து கொள்ளும்படி மிகவும் எளிய முறையில் விளக்கியுள்ளார்கள். எத்தனை ஆண்டுகள் நாம் சாஸ்த்ர நூல்களைப் பயிற்சி செய்தாலும் அல்லது கேட்டாலும் புரியாத பல அரிய விஷயங்கள் நமது ஆசார்யரவர்களால் மிகவும் தெளிவான முறையில் விளக்கப்பட்டுள்ளன. இந்த நூலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ள அருள் வாக்குகளில் சில உபதேச ரூபமாகவும் சில விளக்கங்களாகவும் அமைந்துள்ளன. இந்தத் தொகுப்புகள் தொடர்ச்சியாக ஒரே விஷயத்தைப் பற்றி சொல்லாமல், சில ஒரே விஷயத்தைப் பற்றியும் இருக்கும். சில வெவ்வேறு விஷயங்களைப் பற்றியும் இருக்கும். இவையாவும் ஒரே சமயத்தில் தொகுக்கப்படாமல் வெவ்வேறு சமயங்களில் தொகுக்கப்பட்ட காரணத்தினால் அம்மாதிரி அமைந்துள்ளன. நமது ஜகத்குருவின் உபதேசங்கள் நம்முடைய நினைவில் என்றும் நீங்காமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே இத்தொகுப்பு நூலை வெளியிட்டுள்ளோம். அன்பர்கள் இதனைப் படித்துப் பயன் பெறுவார்களாக.

ஸ்ரீமத் ஜகத்குருவின் உபதேசங்களைப் பிரசாரம் செய்தல் என்ற நமது நோக்கத்தினைப் பூர்த்தி செய்யும் முறையிலும் இந்நூல் அமைந்துள்ளதை அன்பர்கள் காணலாம்.

1965 ம் ஆண்டில் 'ஜகத்குரு திவ்ய சரித சங்க்ரஹம்' என்ற பிரசுரமும், 1966 ல் 'ஜகத்குரு புகழ்மாலை' என்ற நூலும், 1968 ல் 'ஜகத்குரு மங்களாசாசனம்' என்ற நூலும், 1969 ல் 'குருர்தேவோ மஹேச்வர' என்ற நூலும் (திவ்ய சரித சங்க்ரஹம் நீங்கலாக) இலவச வெளியீடுகளாகப் பிரசுரிக்கப்பட்டன. தற்சமயம் இந்த 'அருள் மொழிக் கோவை' என்னும் நூலைத் தற்பொழுதைய காகிதம் விலை முதலியவற்றின் காரணத்தினால் இலவசமாக அளிக்க முடியாமல் 50 காசுகள் விலை வைத்திருக்கிறோம்.

ஜகத்குரு புகழ்மாலை என்ற நூலில் பிரசுரிக்கப்பட்ட 'ஸ்ரீ சந்த்ரசேகர யதீந்த்ர தோடகாஷ்டகம்' என்ற அரிய துதியையும் இந்நூலில் சேர்த்துள்ளோம். இந்தத் தோத்திரம் பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளால் செய்யப்பட்டது. ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்கள் மீது கிரி என்ற தோடகாசார்யர் என்ற சிஷ்யரால் இயற்றப்பட்ட தோடகாஷ்டகத்தின் வ்ருத்தத்தில் அமைந்துள்ளது. இதனை அனைவரும் மனப்பாடம் செய்து தினந்தோறும் ஒரு முறையாவது சொல்லி ஸ்ரீமத் ஆசார்யாளின் அருளுக்குப் பாத்திரர்களாக வேண்டுமென்று இந்தத் தோத்திரத்தையும் இந்நூலில் சேர்த்துள்ளோம்.

அன்பர்கள் இந்த நூலினைப் பெற்று ஸ்ரீமத் ஆசார்யர்களின் நன்மொழிகளை என்றும் நினைவில் வைத்து ஸகல க்ஷேமங்களையும் அடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். இந்த நூல் வெளிவர உதவிய அனைவருக்கும் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருள்மொழிக் கோவை என்னும் இந்த வாடாத மாலையை ஸ்ரீமத் ஜகத்குருவின் திருவடிகளில் ஸமர்ப்பிக்கின்றோம்.

இங்ஙனம்

சென்னை-33
24-8-75

சங்கரனன்பர்க்கடிமை
**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்ம**
பதிப்பாசிரியர்.

சிவமயம்

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீமத் ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகளின் பரிபூரண அனுக்கிரஹத்தால் **அருள் மொழிக் கோவை** என்னும் இந்நூலின் இரண்டாம் பதிப்பினை பிரசுரிக்கும் பேறு எங்களுக்குக் கிடைத்துள்ளது. ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகளின் சதாபிஷேக நினைவு மலராக சென்ற ஆண்டு ஆகஸ்டு மாதம் 31 ஆம் தேதி இந் நூலின் முதல் பதிப்பு வெளியிடப்பட்டது. பிரதிகள் பெரும்பாலும் அன்பளிப்பாகவே வழங்கப்பட்டும், சிறு பான்மை விலைக்கும் கொடுக்கப்பட்டு தீர்ந்து விட்டபடியால் இந்த இரண்டாம் பதிப்பை வெளியிடலானோம்.

முதல் பதிப்பினை பல அன்பர்கள், பெரியோர்கள், ஆசார்ய பக்தர்கள் ஆகியோர் மிகவும் பாராட்டியும், வரவேற்றும் இது நமது சபையின் சிறந்த பணி என்று ஊக்க மூட்டியும் ஆதரித்த காரணத்தால் பொருட்செலவைப் பாராது இவ்விரண்டாம் பதிப்பினை வெளியிட்டுள்ளோம். ஆஸ்திக அன்பர்கள் இவ்விரண்டாம் பதிப்பையும் ஆதரிப்பார்கள் என்று நம்புகிறோம்.

ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகளின் உபதேசங்களை மலிவு விலையில் வெளியிட்டுப் பிரசாரம் செய்வது என்ற எமது நோக்கத்தினைப் பூர்த்தி செய்யும் முயற்சியாக இவ்வெளியீடு அமைந்து உள்ளது. முதல் பதிப்பிற்கு ஏராளவு பொருளுதவி கிடைத்த காரணத்தால் அடக்க விலைக்கும் குறைவாகவே விலை வைத்தோம். இப்பதிப்பிற்கு அவ்வளவு உதவி கிடைக்கவில்லை. எதிர்பார்த்ததைவிட குறைவாகவே உதவி கிடைத்தது. இருப்பினும் நமது இலட்சியத்தைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் இவ்விரண்டாம்

பதிப்பிற்கும் சென்ற பதிப்பைப் போலவே 50 காசுகளே விலை வைத்துள்ளோம்.

சென்ற பதிப்பினைப் போலவே இப்பதிப்பினையும் இன்னும் எத்தனை பதிப்புகள் வெளிவந்தாலும் அவை யாவற்றினையும் ஸ்ரீமத் ஜகத்குரு பரமாச்சார்ய சுவாமிகளின் திருவடித் தாமரைகளில் சமர்ப்பணம் செய்கிறோம்.

இங்ஙனம்
சங்கரனன்பர்க்கடிமை
**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
சிவபுராண ஞான பூஜகர்
பதிப்பாசிரியர்

சென்னை-33
11-4-76

உ

ஸ்ரீ குருப்யோ நம:




# அருள்மொழிக் கோவை

(ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் உபதேசங்களினின்றும்
தொகுக்கப்பட்டது)

## 1

லோகத்தில் எல்லோருக்குமே க்ஷேமத்தைக் கொடுப்பது யாகம். யாகங்கள் செய்தால் தான் லோகங்கள் க்ஷேமமாக இருக்கும். யாகம் ஒழுங்காக நடைபெற வேண்டுமானால் பிராம்மணர்களும் பசுக்களும் க்ஷேமமாய் இருக்க வேண்டும். பொதுவாக லோகத்தின் க்ஷேமத்திற்கு பிராம்மணர்களும், பசுக்களும் முக்கிய காரணபூதர்களாக இருப்பதால் தான் எல்லா இந்து மதப்பிரிவினர்களும் பிராம்மணர்களையும், பசுக்களையும் சிறப்பாகச் சொல்லியிருக்கிறார்கள் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

2

அம்ருதம் என்றால் மோட்சம். மோட்சம் அடைந்தவர்களுக்குச் சாவு, பிறப்பு என்பது இல்லையாகையால் அம்ருதம் என்று சொல்லப்படுகிறது. சரீரம் என்கிற வியாதிக்கு சரியான மருந்து ஞானமே ஆகும். உடம்பை என்னுடையதன்று என்று செய்து விட்டால் உடம்பு என்னும் வியாதி தானாகவே போய் விடும். இதற்காகத் தற்கொலை செய்து கொள்ள வேண்டியதில்லை வேறு உபாயம் தேட வேண்டாம். பகவத்பாதாள் சரீரமிருக்கும் பொழுதே அதை இல்லாமல் செய்து கொள்வது தான் அம்ருதம், மோட்சம் என்று ஸ்தாபித்திருக்கிறார்கள்.

3

கௌணாத்மா, மித்யாத்மா, முக்யாத்மா என்று ஆத்மாக்களை மூன்றாகப் பிரித்துச் சொல்வது வழக்கம். புத்ர மித்ரர்கள் நாமே என்றும் அவர்களுடைய சுக துக்கம் நம்முடையதேயென்றும் எண்ணும் அபிமானம் கௌணாத்மா. சரீரம் முதலியவற்றில் நான் என்கிற அபிமானம் உண்டாவது மித்யாத்மா. சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை பிரித்து சுத்தமான ப்ரம்ம ஸ்வரூபமே நான் என்பது அனுபவத்திற்கு வருகிற பொழுது ப்ரம்மம் ஆத்மாவாகி விடுகிறது. அதைத் தான் முக்யாத்மா என்று சொன்னேன். முதலில் சொல்லப்பட்ட கௌணாத்மா, மித்யாத்மா இவ்விரண்டையும் விலக்கிவிட்டால் புத்ர, மித்ரர்கள், சரீரேந்திரியங்கள். இவைகளுடைய சம்பந்தம் நீங்கிவிடும். அப்பொழுது 'சத்யமான ப்ரம்ம ஸ்வரூபமாகவே நான் இருக்கிறேன்' என்கிற ஞானம் உண்டாகிறது. ஆகையால் நாம் எல்லோரும் பகவத்பாதாள் அருளிய தத்வ ஞானமாகிய இந்த மருந்தை சம்பாதிக்க பிரயத்னப்படவேண்டும். எப்பொழுதும் சுத்தமான சரீரமில்லா நிலையையும், களங்க மற்ற பேரானந்தத்தையும்

பெறலாம். இதற்குக் காரணமான ஈச்வரபாவனை செய்ய வும் எப்பொழுதும் நல்ல காரியங்களிலேயே பிரவிருத்திக்க வும் ஸ்ரீ சந்திர மௌளீசுவரர் அனுக்ரஹம் செய்ய வேண்டும் என்பது பிரார்த்தனை.

4

பசி என்னும் வியாதிக்கு வைத்யம் பண்ணிக் கொள் என்று ஆசார்யாள் ஒரு ச்லோகத்தில் கட்டளையிடுகிறார்கள். வியாதி நிவர்த்திக்கு எவ்வளவு மருந்து அவசியமோ அவ் வளவு தான் வியாதி உடையவன் சாப்பிடுவான். நாக்குக்கு ருசியான மருந்தைத் தேடிச் சாப்பிட்டுக்கொண்டே குறைந்த விலையுள்ள மருந்து கிடைக்குமானால் அதையே வாங்கிச் சாப்பிடுவான். அதைப்போல பசிக்கு எவ்வளவு அவச்யமோ அவ்வளவே சாப்பிடவேண்டும்.

5

இந்த ஜென்மத்திற்கு பின்பும் உபயோகப்படக் கூடிய சில காரியங்கள் செய்யப்பட வேண்டியது அவசியம். விபூதி இட்டுக் கொள்ளுதல், ருத்ராட்சம் அணிதல், ச்ராத்தம் செய்தல் முதலிய காரியங்கள் நாம் எப்பொழுதும் சௌக் கியமாக இருப்பதற்கு உதவும் காரியங்கள். இவற்றைப் போன்ற காரியங்களை எவ்வளவு அதிகமாக நாம் செய் கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அவை நன்மையை உண்டாக்கும்.

6

இந்த ஊர் நோட் ருஷியாவில் செல்லாது. எல்லா ஊருக்கும் ஒரு ராஜா இருந்தால் அவனுடைய முத்திரை யுள்ள நோட் எங்கும் செல்லும். இந்த பதினான்கு லோகங் களுக்கும் ஒரு ராஜா இருக்கிறான். அவன்தான் பரமேச் வரன். அவனுடைய சகல ராஜ்யங்களிலும் செல்லும் நோட் ஒன்று இருக்கிறது. அது எப்பொழுதும் எவ்விடத் திலும் செல்லும். அதுதான் தர்மம்.

## 7

எந்த தர்மத்தை நாம் அனுஷ்டிப்பது? பலகாலமாக பரம்பரையாக பெரியவர்கள் அனுஷ்டித்து வந்த தர்மத்தில் நாம் ஊறி இருக்கிறோம். அனுபவத்தில் அவர்கள் நித்ய சௌக்யத்தை அடைந்திருக்கிறார்கள். அந்த தர்மத்தை நாம் கடைப்பிடித்தால் போதும். நாமாக ஒன்றைப் புதிதாகப் பிடித்துக் கொண்டால் வீண் அலைச்சல். அது நல்லதோ கெட்டதோ என்ற சந்தேகம். ஆதலினால் முன்பே பெரியவர்களால் அனுஷ்டிக்கப்பட்டு நமக்கென்று ஏற்பட்ட தர்மத்தைக் கைகொள்வதே நல்லது.

## 8

தர்மமே தலைகாக்கும், நம்முடைய காமக்குரோதம் முதலியவற்றின் பொருட்டும் ஜீவனத்தின் பொருட்டும் அல்லாமல் அதிகப் படியாக உள்ளதும் பரம்பரையாக அனுஷ்டிக்கப்படுவதும் ஆகிய தர்மத்தை தைரியமாகவும், நியமத்துடனும் நாம் செய்து வந்தால் அது எப்பொழுதும் சௌக்கியத்தைக் கொடுக்கும்.

## 9

நாம் நான்கு விதத்தில் தர்மம் செய்து வரலாம். சரீரத்தாலும், வாயாலும், மனத்தாலும், பணத்தாலும் செய்யலாம். நமக்குக் கிடைக்கும் பணத்தில் ஒரு தம்பிடியையாவது ஒவ்வொரு நாளும் தர்மத்திற்காக உண்டியல் கட்டிப் போட வேண்டும். இந்தப் பணத்தை தர்ம நோட்டாக மாற்றி விட்டால் அது எங்கேயும் செல்லும், நம்முடைய குழந்தைகளுக்கென்று இப்பொழுதே தர்ம உண்டியல் ஏற்படுத்த வேண்டும். அவர்களுக்காக இன்ஷியூர் செய்வதில்லையா? இந்த இன்ஷியூரென்சு இந்தப் பிறவிக்குப் பிறகும் உபயோகப்படுமாதலால் இதை After life Insurance என்று கருத வேண்டும்.

## 10

ஹிருதயம் யாருடைய இடம் என்பதை அறிய வேண்டும். அது பகவானுக்குரிய இடம், அதை நாம் குப்பைத் தொட்டியாக்கியிருக்கிறோம். நன்கு மெழுகி, சுத்தப்படுத்தி, அதில் பகவானை உட்கார வைத்து நாமும் உட்கார வேண்டும். அதற்கு என்ன வழி? நித்தியம் ஐந்து நிமிஷமாவது சுவாமியின் பாதத்தைத் தியானம் செய்ய வேண்டும். எந்த விதமான சமயத்திலும் இது தவறாமல் நடக்கவேண்டும். அப்பொழுது ஈச்வரானுக்ரகம் உண்டாகும். மனம் தியானத்தில் ஈடுபட்டால் வாய் முதலியன அதன்படியே நல்ல காரியம் செய்யும்.

## 11

உடம்பினால் நல்ல காரியம் செய்யவேண்டும். கோயிலுக்குப் போய் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்ய வேண்டும். தண்டம் சமர்ப்பித்தல் என்று நமஸ்காரத்தைச் சொல்லுவார்கள். தடியைப் போல் விழுவதுதான் அது. இந்த உடம்பு நமதன்று, அவருடையது என்று நினைத்து அவர் சன்னிதியில் போட்டு விடவேண்டும்.

## 12

வாக்கினால் பகவானுடைய நாமத்தைச் சொல்ல வேண்டும். வீணாக வம்பு பேசுவதினால் பாவமும் அதனால் உபத்ரவமும் உண்டாகிறது. பகவன் நாமாவைச் சொல்வதால் அந்த உபத்ரவமும் இல்லை. மேலோ, புண்ணியமும் உண்டாகிறது.

## 13

வேதங்களுள் யஜுர் வேதம் முக்கியமானது. அதற்குள் அதன் மத்தியபாகமாகிய நாலாவது காண்டம் முக்கியமானது. அதற்குள்ளும் மத்ய பாகமான நாலாவது பிரச்னம் முக்கியமானது. அது தான் ஸ்ரீருத்ரம். அதற்

குள்ளும் நம: சிவாய என்ற பஞ்சாக்ஷர வாக்யம் மத்தியில் இருக்கின்றது. அதன் மத்தியில் 'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்கள் அடங்கியுள்ளன. இதையே ஜீவ ரத்நம் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இந்த அபிப்ராயத்தை அப்பய்ய தீக்ஷிதர்வாள் ப்ரம்ம தர்க்கஸ்தவத்தில் சொல்லியிருக்கிறார்கள். அந்த ப்ரம்மம் சிவஸ்வரூபம் என்று தெரிகிறது.

## 14

அப்படிப்பட்ட ஸ்வரூபத்தை ஆராதிப்பதற்கு அடையாளமாகச் சிவ பக்தர்கள் எல்லோரும் ஐந்து வித காரியங்களை செய்து கொண்டிருக்க வேண்டும். அவைகளாவன (1) விபூதி பூசிக் கொள்ளுதல், (2) ருத்ராக்ஷம் அணிதல், (3) பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்தல். பஞ்சாக்ஷர மந்த்ரம் உபதேசமாகாதவர்கள் "சிவ" என்ற பதத்தை ஜபம் செய்தல், (4) பில்வதளத்தால் பரமேச்வரனைப் பூஜித்தல், (5) ஹிருதயத்தில் சதா சிவத்யானம் செய்தல் இவைகள் ஒவ்வொன்றும் ஈச்வரனுக்கு விசேஷ ப்ரீதியைக் கொடுக்கக் கூடியது.

## 15

நாமாவும் ரூபமும் இல்லாத மதம் நமது மதம். பேர் ஏன் இல்லை? அடையாளம் ஏன் இல்லை? மற்ற மதங்களுக்கெல்லாம் இருக்கிறதே என்று ஒரு சமயம் யோசித்துப் பார்த்தேன். அப்புறம் எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. பேரில்லாமல் இருப்பது ஒரு கௌரவம் என்பது ஏற்பட்டது.

## 16

மதம் என்பது என்ன? ஜன்மம் எடுத்ததின் பிரயோஜனத்தை அடையச் சொல்லிக் கொடுக்கும் ஒரு வழி. ச்ரேயஸுக்கு எது சாதனமோ அதுதான் மதம். அது தர்மம் என்னும் பெயரால் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜன்மம் கடைத்தேறுவதற்கு வழி அந்த தர்மம் தான். அதற்கு பேர் எதற்கு?

## 17

எங்கள் ஊரில் ராமு என்னும் பேர் உடையவர்கள் நான்குபேர் இருந்தார்கள். அவர்களைத் தனித்தனியே சொல்லும் பொழுது கருப்பு ராமு, நெட்டை ராமு, குருட்டு ராமு, சிவப்பு ராமு என்று சொல்வது வழக்கம். அடுத்த ஊருக்கு ஒரு நாள் போனேன். அங்கே ராமு என்று ஒருவனே இருந்தான். ஒருவர் என்னிடம் "ராமுவைக் கூட்டிக் கொண்டு வா" என்றார். நான் எங்கள் ஊர் ஞாபகத்தில் "எந்த ராமு?" என்று கேட்டேன். அவர் "எந்த ராமுவாவது, எத்தனை ராமு இருக்கிறார்கள்? இருப்பவன் ஒருவன் தானே?" என்று கேட்டார். ஒரு ராமுவே இருக்கும்பொழுது அடையாளம் வேண்டாம் என்று எனக்கு அப்போது தெரிந்தது. நம்முடைய மதம் ஒன்றே இருந்த பழைய காலம் ஒன்று உண்டு. அந்தக் காலத்தில் அதற்குத் தனிப் பெயர் இருக்க வேண்டிய அவச்யம் இல்லையல்லவா? வேறு மதங்கள் இருந்தால் தனிப் பேரும் அடையாளமும் வேண்டும். முதன் முதலில் இருந்த மதம் தனிப் பெயரில்லாமல் தானே ஏற்பட்டிருக்க வேண்டும்? இதை நினைக்கும் பொழுதுதான் இந்த மதத்தில் பிறந்ததைக் குறித்து ஒரு கௌரவ புத்தி எனக்கு உண்டாயிற்று. வெகு காலமாக இந்த மதம் இருந்து வந்ததற்கு இதற்கு தனிப் பேர் இல்லாததே அடையாளம்.

## 18

ஆனாலும் இதற்கு ஒரு அடையாளம் உண்டு. அது என்ன? வேதத்தில் சொல்லியிருப்பதை நம்புவதுதான் நம்முடைய பொது அடையாளம். எந்த ஜாதியானாலும் வேதத்தை நம்ப வேண்டும். வேதம் சொல்லியபடி நடப்பது நம்முடைய கடமை என்று எல்லோரும் நினைக்க வேண்டும்

எல்லாக் குலத்தினருக்கும் வேத நம்பிக்கை இருக்க வேண்டும்.

## 19

ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் என்று ஒரு பெரியவர் இருந்தார்கள். இன்றைக்கு நாம் விபூதி, ருத்ராக்ஷம் தரித்திருப்பது அவர்களுடைய ப்ரயத்தனத்தின் ப்ரயோஜனம். அவர்கள் 104 புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். சிவோத்கர்ஷத்தை ஸ்தாபித்தார்கள். விஷ்ணு த்வேஷத்தால் அவர்கள் அப்படிச் செய்யவில்லை. விஷ்ணு பக்தி என்று பேர் வைத்துக்கொண்டு சிவபக்தியை நாசம் பண்ணி சிவ த்வேஷத்தை வளர்ப்பதை அவர்கள் வெறுத்தார்கள் "சிவத்வேஷத்தை ஸஹிக்க மாட்டேன்" என்று சொல்லிச் சிவோத்கர்ஷத்தை ஸ்தாபித்தார்கள். விஷ்ணுத்வேஷம் இருந்திருந்தால் விஷ்ணு சம்பந்தமாக எழுதியிருக்கமாட்டார்கள். விஷ்ணுவைப் பற்றியும் சில புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்கள்.

## 20

அத்வைதம் என்பதின் அர்த்தம் என்ன? இரண்டாவது இல்லாதது என்பதுதான் அதன் அர்த்தம். அப்படி இரண்டாவது இல்லாததனால் நமக்கென்ன லாபம்? நமக்கு வரும் கஷ்டமெல்லாம் நிவர்த்தியாக வேண்டும் என்று பாடுபடுகிறோம். அந்த கஷ்ட நிவர்த்தி இந்த அத்வைதத்தால் உண்டாகும். தரித்ரம், பசி, அவமானம், வியாதி வ்யவஹாரம், மனஸ்தாபம் முதலியவைகளை நிவர்த்தி செய்வதற்காக நாம் கஷ்டப்படுகிறோம். எந்த ஊரிலாவது இந்தக்கஷ்டம் இல்லாமல் இருக்கிறதா? ஆனால் நாம் துக்க நிவர்த்திக்காக ப்ரயத்னம் பண்ணி கொண்டேயிருக்கிறோம். நம்முடைய லௌகிக ப்ரயத்னங்களால் தற்கால சாந்தி மட்டும் உண்டாகிறது. ஒரு வ்யாதிக்கு மருந்து கொடுத்து அதை நிவர்த்தி செய்து விட்டால் வேறொரு வ்யாதி வரு

கிறது. இப்படி உள்ள கஷ்டங்களை நீக்குவதற்கு நிரந்தரமான உபாயம் அத்வைதம்.

## 21

நாம் ஏன் துக்கப்படுகிறோம்? நமக்குப் பசி, வ்யாதி முதலியவைகளால் துன்பம் உண்டாகிறது. இவைகள் எல்லாம் உடம்பு இருக்கும் வரைக்கும் இருக்கும். இந்த உடம்பு போய்விட்டால் மற்றோர் உடம்பு வருகிறது. அந்த உடம்புக்கும் பசி, தாகம், வ்யாதி முதலியவைகளெல்லாம் வருகின்றன. ஆகவே உடம்பில்லாமல் பண்ணி விட்டால் நமக்கு இந்தக் கஷ்டங்கள் எல்லாம் இல்லாமற் போகும். உடம்பு எதனால் வருகிறது? முன் ஜன்மத்தில் பண்ணிய பாப புண்யங்களை ஆத்மாவால் அனுபவிக்க முடியாது. ஆகையால் அவைகளை அனுபவிக்க ஒரு உடம்பு வேண்டியிருக்கிறது. நாம் செய்த பாபத்திற்காக ஈச்வரன் உடம்பைக் கொடுத்து நம்மை சிக்ஷிக்கிறார். ஆகையால் நாம் பண்ணுகிற பாபம் உடம்புக்குக் காரணம். இனிமேல் பாபம் பண்ணாமல் இருந்தால் உடம்பு வராது. பாபம் பண்ணக்கூடாது என்ற நினைவு தினமும் இருக்கவேண்டும்.

## 22

பாப புண்ணியத்துக்குக் காரணம் என்ன? அவற்றைச் செய்யாமல் நிறுத்த இஷ்டமிருக்கிறது. ஆனால் முடியவில்லை. ஒரு மரத்தைத் தழையாமல் செய்ய வேண்டுமானால் கிளைகளை வெட்டினால் முடியாது. அடி மரத்தை வெட்ட வேண்டும். அதுபோலப் பாபத்துக்குக் காரணத்தையறிந்து அதை அழிக்க வேண்டும். பாபம் செய்யக் காரணம் ஆசை. நல்ல பதார்த்தங்களைக் கண்டால் ஆசை தோன்றுகிறது. அது நல்லது என்ற ஓர் அறிவு இச்சையை உண்டாக்குகிறது. அந்த இச்சையைப் பூர்த்தி பண்ணக் காரியங்கள் செய்கிறோம். பாபத்துக்கு உடம்பு தண்டனை. ஆகையால் அந்தப் பாபகாரணமாகிய ஆசையை நிவர்த்தி

பண்ணினால் துக்க நிவர்த்தி உண்டாகும். இந்த துக்க நிவர்த்தி பண்ணுவது எப்படி என்று இதர சாஸ்த்ரங்கள் வழி சொல்லாமல் விட்டு விட்டன.

## 23

வேதாந்தம் இந்தத் துக்க நிவர்த்திக்கு தக்க வழியைச் சொல்கிறது. த்வேஷமும் ஆசையும் நமக்கு அன்யமாக இருக்கும் வஸ்துக்களிடத்தில் தான் உண்டாகின்றன. நம்மிடத்தில் நமக்கு வெறுப்பும் ஆசையும் உண்டாவதில்லை. நம்மினும் வேறாக ஒன்று இல்லாமல் எல்லாவற்றையும் நாமாகப் பண்ணினால் ஆசை உண்டாகாது. ஆசை இல்லாவிட்டால் ப்ரயத்தனம் இல்லை. அதனால் பாபம் இல்லை. பாபம் இல்லாத பொழுது தேகம் இல்லை. தேகம் இல்லாவிட்டால் துக்கம் இல்லை. இரண்டாவது ஒன்று இருந்தால் அது நம்மை விடச் சக்தி உள்ளதாக இருந்தால் பயம் உண்டாகிறது. அழகாக இருந்தால் ஆசை உண்டாகிறது. இரண்டாவது இல்லாவிட்டால் ஆசை இல்லை. த்வேஷம், பயம் இல்லை. தேளாலும் பாம்பாலும் பயம் உண்டாகிறது. நாமே தேளும் பாம்புமாக இருந்து விட்டால் அப்பொழுது பயம் ஏது? நம்மிடம் நாமே பயப்படுவோமா? இரண்டாவது என்று ஒன்று இருக்கும் வரையில் இந்த மாதிரி பயம் இருக்கும். ஆகையால் இரண்டாவது இல்லாமற் பண்ணுவது தான் அத்வைதம். இரண்டாவது இல்லையானால் பயம் நீங்குகிறது என்று உபநிஷத் சொல்லுகிறது.

## 24

இரண்டாவது இல்லாமல் எப்படி பண்ணுகிறது? வேதாந்தம் இந்த லோகத்தில் நாம் பல வஸ்துக்களாகக் காண்பவைகள் எல்லாம் ஈச்வரஸ்வரூபம் என்று சொல்லுகிறது. நமக்கு அப்படித் தோன்றவில்லையே? எல்லாம் ஈச்வரன் என்பது நிஜமானால் நமக்குத் தோன்றுவது பொய்யாக இருக்க வேண்டும். நமக்குத் தோன்றுவது

நிஜமானால் நமக்குக் கஷ்டம் வரக்கூடாது. ஆனால் கஷ்டம் வருகிறது. ஆகையால் வேதாந்தம் சொல்வது தான் நிஜம். அது உண்மையானால் எல்லாம் ஈச்வர ஸ்வரூபம் என்பது உறுதியாக வேண்டும். நமக்குத் தோன்றுவது பொய். ஸத்யமானது வேறு ஒன்று உண்டு. லோகமெல்லாம் மெய்யான ஒரு வஸ்துவென்று அத்வைதம் சொல்லுகிறது. நமக்கு வஸ்துக்களாகத் தோன்றுவதெல்லாம் பொய். மெய்யான வஸ்துவொன்றே மெய்.

## 25

எல்லாம் ஈச்வரன் என்றால் நாம் மட்டும் வேறேயா? நம்மையும் அந்த ஈச்வரனைக் கரைக்க வேண்டும். அப்பொழுது இரண்டாவது என்பது இல்லை. நாம் இப்பொழுது வெவ்வேறாகப் பார்க்கிறோம். எல்லாம் ஈச்வரனைப் பார்ப்பது தான் நிஜப் பார்வை. இரண்டாவது இல்லாமல் நாமும் கரைந்து விட்டால் நல்லது உண்டாகும். லோகத்தில் கூட இரண்டு மனஸ் ஒன்றானால் சண்டையில்லை. அதுபோல எல்லாம் ஈச்வரனாகி ஒன்றாகி விட்டால் எல்லாம் நாமாக ஆகிறோம். அப்போது ஆசை இல்லை. பாபம் இல்லை. தேஹம் இல்லை. தேஹம் இல்லாவிட்டால் துக்கமே இல்லை அந்த துக்க நிவர்த்திக்கு அத்வைதம் மருந்து. இரண்டாவது இல்லாமற் பண்ணுவது அத்வைதம். எல்லாம் பகவானை பார்ப்பதுதான் அத்வைதம். உள்ளதை உள்ளபடி பார்ப்பதுதான் அத்வைதம்.

## 26

ஸ்வப்னம் எதற்காக இருக்கிறது? ஈச்வரன் எங்கும் இருக்கிறார். அவர் அத்வைதப்ரம்மம். எல்லாம் ஆத்ம ஸ்வரூபம். அதை நிரூபித்துக் காட்டுவதற்கு இந்த ஸ்வப்னத்தை அவர் உண்டாக்கியிருக்கிறார் என்று தோன்றுகிறது. இந்த லோகம் நமக்குப் பலவாறாகத் தோன்று-

வது ஸ்வப்னத்தைப் போல இருக்கிறது. ஸ்வப்னத்தில் என்ன என்னமோ கஷ்டங்களும் சுகங்களும் வருவனவாகத் தோன்றுகின்றன. ஸ்வப்னம் முடிந்தால் ஒன்றும் இருப்பதில்லை. ஸ்வப்னம் பார்த்தபோது இருந்ததாகத் தோன்றிய உடம்பு கூட இருப்பதில்லை. ஸ்வப்னம் கண்டோம் என்று அறிந்து கொண்ட ஒருவன் தான் மிச்சம். ப்ரபஞ்ச ஸ்வப்னத்திலிருந்து நாம் விழித்துக் கொண்டால் அறிவு ஒன்று தான் மிஞ்சும். ஸத்யமான வஸ்து அதுதான். அதற்குத் தான் அத்வைதம் என்று பெயர்.

## 27

அத்வைத நிலை வாக்கும் மனமும் அடைய முடியாமல் திரும்புமிடம் என்று வேதமானது சொல்கிறது. மனஸால் நினைக்க முடியாவிட்டால் எப்படித் தெரிந்து கொள்வது? அப்படிச் சொல்வதன் அர்த்தம் என்ன? பரமாத்மாவை அறியலாம் என்றால் அறியப்படும் பொருள் அது ஆகிறது. அறிபவன் வேறு ஆவான். கேநோபநிஷத்தில் "எனக்குத் தெரிந்தது என்பவனுக்குத் தெரியாது! தெரியவில்லை என்று சொல்பவன் தெரிந்தவன்"! என்று சொல்லப்படுகிறது. விளக்கைக் காட்ட வேறு விளக்கைக் கொண்டு வந்தால் அதற்கு அர்த்தம் இல்லை. ஜடத்திற்குத்தான் விளக்கு வேண்டும் விளக்கைத் தெரிந்து கொள்ள வேறு விளக்கு வேண்டாம். அறிவு ஸ்வப்ரகாசமானது. அந்த அறிவே உருவாக இருப்பது ஈச்வர ஸ்வரூபம். ஈச்வரன் அறிவுருவே என்று சொல்லப்படுகிறார். மனஸாலே அது ஆலோசிக்கப்படுவதில்லை. மனஸ் அதனாலே ஆலோசிக்கிறது. மனஸ் ஆலோசிக்கிறதெல்லாம் பொய். எதனால் அது ஆலோசிக்கிறதோ அது மெய்.

## 28

இப்போது நாம் முடிவாக அறிந்துகொண்டது நிஜம் ஒன்று தான் இருக்கிறது; 'எல்லாம் ஈச்வர ஸ்வரூபம்'

என்பதே வாசனையால் வேறு வேருகத் தோன்றுகிறது. எல்லாவற்றையும் ஒன்ருக்க வேண்டும். 'நாம்' என்பதை யும் கரைக்க வேண்டும். அதற்கு வேண்டிய சாஸ்த்ரங் களையும் படிக்க வேண்டும். இதற்கு ஸாதனம் ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம், கோயில் தரிசனம், பூஜை முதலியவை கள். உலகத்திலுள்ள வஸ்துக்களுக்காக எவ்வளவோ த்யாகம் பண்ணுகிருேம். நமக்கு ஸ்திரமான ஆனந்தத்தை அடைவதற்கு எல்லாம் பண்ணலாம். இந்த நிலைக்கு வருவதற்கு சுலபமான ஸாதனம் ஸ்ரீ சந்த்ரமௌளீச் வரருடைய உபாஸனை என்று ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் சொல்லியிருக்கிருர். அதை எல்லோரும் அனுஸரித்து அத்வைத சித்தியை அடைய வேண்டும்.

## 29

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று ஔவை சொல்லியிருக்கிருள். 'மாத்ரு தேவோ பவ பித்ரு தேவோ பவ' என்று உபநிஷத்தும் சொல்கிறது. இந்த ஒரு ஜென்மத்துக்கு ஏற்பட்ட ஒரு தாயையே தெய்வமாகக் கொண்டாட வேண்டும். அம்பிகை எந்த ஜென்மத்துக் கும் மாதா. இந்த லோகத்தில் நாலைந்து குழந்தைகளுக்கு ஒருத்தி தாயாக இருக்கிருள். எல்லாக் குழந்தைகளுக்கும் எல்லாக் காலத்திலும் தாயாக இருப்பவள் அம்பிகையே. அந்த ஒரு தாய் வயிற்றிலிருந்து யாவரும் உண்டானவர் கள். தாயாரைத் தெய்வமாக நினை என்பதனுல் அவ்வாறு நினைக்க முடியும் என்று தெரிகிறது. அதைத் திருப்பி தெய்வத்தைத் தாயாக நினைப்பது தான் அம்பிகையின் த்யானம்.

## 30

ஸாக்ஷாத் பரப்ரம்மமே அம்பிகையாய் இருந்து தாயைப்போல் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அனுக்ரஹம் பண்ணிக் கொண்டிருக்கிருள். அம்பாளை ஆராதனை பண்ணி எவ்வளவோ மஹா புருஷர்கள் அனுக்ரஹத்தை

அடைந்திருக்கிறார்கள். மஹாகவியாகிய காளிதாசருக்கு அம்பிகையுடைய க்ருபையால் பரிபூரண வாக்கு உண்டா யிற்று. அம்பிகையின் க்ருபை உண்டானதும் ச்யாமளா தண்டகம் என்று ஒரு ஸ்தோத்ர க்ரந்தம் செய்தார்.

## 31

அம்பிகையே வாக்ஸ்வரூபமாக இருப்பவள். அம்பாள் உருவம் முழுவதும் அக்ஷரங்கள் நம்முடைய உடம்பில் எல்லாம் நாற்றமுள்ள வஸ்துக்களே நிரம்பியிருக்கின்றன. இந்த ஆபாசங்களுக்குள் அறிவு என்ற ஒரு மணி இருக் கிறது. அம்பாள் உடம்போ அகாராதி க்ஷகாராந்தம் இருக்கும் அக்ஷரங்கள் தான். அக்ஷரமாலிகை மாத்ருகா ஸ்வரூபம் என்பர். ஸர்வவர்ணாத்மிகே என்று காளிதாசர் சொல்லியிருக்கிறார். எல்லா எழுத்துக்களின் வடிவமா யிருப்பவளே என்பது அதன் கருத்து. அந்த அம்பிகையை நாம் அன்போடு த்யானம் செய்ய வேண்டும். அபேதமாக அவள் வேறு நாம் வேறு என்பதின்றி த்யானம் செய்ய வேண்டும்.

## 32

அம்பிகை விஷயமான ஸ்தோத்ரங்களைச் செய்தவர் களுள் நம்முடைய ஆசார்யாளும் ஒருவர். அவர் ஈச்வராவதாரம். ஸ்ரீமத் ஆசார்யாள் தாம் எடுத்த வேஷத்திற் கேற்ப கைலாஸம் போனார். போய் ஐந்து ஸ்படிக லிங்கங் களை வாங்கி வந்தார். அவைகளில் ஒன்று தான் சந்த்ர மௌளீச்வரர். கைலாஸத்தில் ஈச்வரன் இருக்கிற இடத்தில் அம்பாளுடைய மந்த்ரசாஸ்த்ரம் இருந்தது. அதை எடுத்துக்கொண்டு வரும்பொழுது நந்திகேச்வரர் அதைப் பிடித்துக் கொண்டார். அவரிடமிருந்து உருவிக் கொண்டு ஒரு பாகத்தை ஆசார்யாள் கொண்டு வந்தார் கள். அதில் 41 ச்லோகங்கள் இருந்தன. இங்கே வந்து மேலே 59 ச்லோகங்களைச் செய்து பூர்த்தி பண்ணினார். அதுதான் ஸௌந்தர்யலஹரி.

## 33

நம்முடைய மதம் எவ்வளவோ யுகங்களாக நீடித்து வாழ்ந்து வந்திருக்கிறது. நமக்குத் தெரியாமல் ஏதோ ஒன்று இதைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. எவ்வளவோ வித்யாசங்கள் இருந்தாலும் இந்தமதம் அழியாமல் நிற்கிறது. லோகம் புரண்டு போனாலும் நம்முடைய கடமைகளைச் செய்து கொண்டு பயமின்றி அன்புடன் ஸாமான்ய தர்மங்களை நன்றாக ரக்ஷித்து விசேஷ தர்மத்தைக் கூடிய வரை ரக்ஷிக்க வேண்டும். அதற்குரிய சக்தியைப் பகவான் அருள்வாராக.

## 34

அஹிம்ஸை என்பது எல்லோருக்கும் வேண்டியது. ஓர் எறும்பைக் கூட நாம் கொல்லக் கூடாது. யாருடைய சரீரத்துக்கும் ஒரு கஷ்டத்தையும் உண்டு பண்ணக் கூடாது. அதுதான் அஹிம்ஸை. இந்த அஹிம்ஸையானது மனுதர்ம சாஸ்திரத்தில் ஸாமான்ய தர்மங்களுள் ஒன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யோக சாஸ்த்ரத்தில் யோகத்திற்கு அங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் முக்ய ப்ரயோஜனம் சித்தம் அடங்குவது. அஹிம்ஸை திரிகரணங்களாலும் ஸாதித்து விட்டோமானால் நமக்கு எதிரில் யாவரும் சாந்தமடைவார்கள். இது நமக்கு மற்றோர் ப்ரயோஜனம்.

## 35

ஸத்யத்திற்கு லக்ஷணம் ஒன்று உண்டு. மனதும் வாக்கும் ஒரே விஷயத்தைச் செய்வதுதான் ஸத்யம். மனதில் உள்ளது வாக்கில் வர வேண்டுமென்பது பொது லக்ஷணம். எதற்காக மனத்திலுள்ளதை வாக்கினால் சொல்லவேண்டும் என்பதை யோஜிப்போம். ஸத்யமும் நல்லதை உண்டாக்க வேண்டும். நல்லது உண்டானால் அது ஸத்யம். ஸத்யமானது எல்லா ஜீவன்களுக்கும் க்ஷேமகரமாயிருக்க வேண்டும்.

36

ஸத்யத்திற்கும் ஒரு அவாந்தர ப்ரயோஜனம் உண்டு. ஸத்யத்தையே சொல்லிச் சொல்லிப் பழக்கப்படுத்தி விட்டால் மனம் ஸத்யத்தையே நினைக்கும். வாக்கு ஸத்யத்தையே சொல்லும். அப்பொழுது சொல்லப் படுபவை எல்லாம் ஸத்யமாகும். தவறிச் சொன்னாலும் அந்தச் சொல் ஸத்யமாகவே ஆகிவிடும். வாக்கிலிருந்து வந்தது உள்ளதாகி விடும் சக்திதான் சாபானுக்ரஹ சக்தி ஸத்யம் பேசுகிறவர்கள் இன்றைக்குப் பூர்ணிமை என்றால், சந்திரன் அப்படியே வந்து நிற்பான். நிக்ரஹானுக்ரஹ சக்தி உண்டாகும்.

37

அநியாய ஆசை நமக்கு இருக்கக் கூடாது. மற்றவன் சொத்தை ஏமாற்றிப் பெறக்கூடாது. அடித்துப் பிடுங்கக் கூடாது. எல்லாவற்றையும் விட கடிதத்தின் மூலமாகத் திருடுவது மிகவும் மோசமான காரியம்.

38

சரீர சுத்தி மனச் சுத்தியை உண்டாக்கும். சரீர சுத்தத்திற்கு ஏற்பட்ட காரணங்கள் தர்ம சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன பதார்த்தங்களைக் கொண்டு சுத்தி செய்து கொள்ள வேண்டும், இன்ன இன்ன பாத்திரங்களை இன்ன இன்ன விதம் சுத்தம் செய்ய வேண்டும் என்கிற விஷயங்கள் சாஸ்த்ரங்களில் காணப்படுகின்றன. எல்லாக் கர்மாக்களுக்கும் சுத்தம் மிகவும் அவசியம். இப்போது நாம் மறந்து போனாலும் தெரிந்து கொண்டு நாம் அனுஷ்டானம் செய்ய வேணடும். இதைக் கூட நாம் சரியாகச் செய்யாவிட்டால் மனதை எப்படி அடக்குவது?

39

நம்முடைய இந்திரியங்களை அவைகளின் போக்கிலே விட்டு விடக் கூடாது. ஒவ்வொரு இந்திரியத்துக்கும்

இவ்வளவு தான் ஆஹாரம் கொடுக்கவேண்டும் என்று கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். அனுபவம் அந்தக் கணக்குப்படி இருக்கவேண்டும. மீறினல் அவற்றை அடக்கும் சக்தி வேண்டும்.

## 40

நம்முடைய மதத்துக்கு ப்ரமாணமாக இருப்பவை நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்ம சாஸ்த்ரம் ஆக பதினைன்கு. இவை வித்யா ஸ்தானங்கள் என்றும் சொல்லப்படும். ஆறு அங்கங்கள் சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பவைகள். இவைகளில் சிக்ஷை வேதபுருஷனுக்கு நாசிகையாகும். வ்யாகரணம் முகம். முகம் என்பது இங்கே வாய். வேதபுருஷனுக்கு பாதமாக இருப்பது சந்தஸ் என்னும் அங்கம். நிருக்தம் வேதபுருஷனுக்கு சுரோத்ரஸ்தானம். ஜ்யோதிஷம் நேத்ரஸ்தானம். கல்பம் என்பது வேதபுருஷனுக்குக் கரம் என்பார்கள். மீமாம்ஸை ந்யாயம், புராணம், தர்ம சாஸ்த்ரம் என்பவையே நான்கு உபாங்கங்கள்.

## 41

மூன்று மூர்த்திகளுக்கும் மேலே அதீதராகப் பரமசிவன் இருக்கிறார். அவர் ப்ரம்மாவுக்கு அனுக்கிரஹம் பண்ணு கிறார். காமேச்வரனை அருள் புரிகிறார். பராசக்தி காமேச் வரியாக அனுக்ரஹிப்பாள். பரமேச்வரனுடைய அனுக்ர ஹத்தால் ப்ரம்மா வேதங்களை அறிந்து கொள்கிறார். நான்கு வேதங்களையும் நான்கு முகத்தில் சொல்லிக் கொண்டு ச்ருஷ்டியைச் செய்து கொண்டு இருக்கிறார்.

## 42

வேதம் என்பது ஈச்வரன் உண்டாக்கிய சட்டம். நாம் ப்ரஜைகள். ஈச்வரன் நமக்கு அரசர். அவருடைய ராஜாங்

கத்தில் இந்திரன், வாயு, வருணன் முதலிய பல தேவதை களை லோகத்தை ஸம்ரக்ஷிக்கும் அதிகாரிகளாக நியமித் திருக்கிறார். அந்த அதிகாரிகள் 14 லோகத்திலும் உள்ள ஜீவராசிகளை ரக்ஷிப்பதற்கு ஒரு சட்டம் வேண்டுமல்லவா? அந்த சட்டம் தான் வேதம். தர்மத்தை அனுஷ்டானம் பண்ணும் வழிகளையெல்லாம் சொல்லும் வேதமாகிற சட்டத்திற்கு அர்த்த நிர்ணயம் பண்ணினவர் ஜைமினி. அதுதான் மீமாம்ஸை. பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை என இரண்டு வகைப்படும். பூர்வ மீமாம்ஸை வேதத்தின் பூர்வ காண்டத்திற்கு அர்த்த நிர்ணயம் செய்வது. அதைப் போல உத்தர காண்டமாகிய உபநிஷத்துக்களின் அர்த்தத்தை நிர்ணயம் செய்வது உத்தர மீமாம்ஸை. பரமாத்மாவைப் பற்றியும் அதனோடு வேறுகாமல் ஒன்றுவதைப் பற்றியும் இவை போன்ற வேறு விஷயங்களைப் பற்றியும் சொல்வது உபநிஷத்து. அந்தச் சட்டத்திற்கு அர்த்த நிர்ணயம் செய்தவர் வ்யாஸர். வேதாந்த சாஸ்த்ரத்துக்கு அர்த்தம் விசாரிக்கும் உத்தர மீமாம்ஸைதான் வேதவ்யாஸருடைய ப்ரம்ம ஸூத்ரம் என்று சொல்லப்படுவது.

## 43

வ்யாஸர் ஸூத்ரம் செய்தார். அதில் 192 அதிகரணங்கள் இருக்கின்றன. அந்த ஸூத்ரத்திற்கு பாஷ்யகாரர்கள் நம்முடைய ஆசார்யாரவர்கள். எல்லா கர்மாவுக்கும் முடிவு ஞானகாண்டம். அது ஆத்மலாபத்தைச் சொல்வது. ஸூத்ரத்திற்கும் உபநிஷத்திற்கும் உள்ள சம்பந்தத்தை பாஷ்யம் விளக்கிக் காட்டுகிறது. எல்லாவற்றிற்கும் முடிவான வேதாந்த ஸூத்ர பாஷ்யம் செய்ததனால் நம்முடைய ஆசார்யர்களுக்கு ஜகதாசார்யர்கள் என்னும் சிறந்த பெயர் ப்ரஸித்தியாகச் சொல்லப்பட்டு வருகிறது.

## 44

புராணம் என்பது வேதத்திற்கு பூதக்கண்ணாடி. வேதத்தில் உள்ளவை உத்திரவுகளாக இருக்கும். 'ஸத்யம்

வத' உண்மை பேசு என்று வேதம் சொல்கிறது. பல அத்தியாயங்களால் செய்யப்பட்ட அரிச்சந்திர புராணத்தை வாசித்தால்தான் அது நினைவுக்கு வருகிறது. புராணம் என்பதற்குப் பழையது என்று அர்த்தம்' வாஸ்தவமான சரித்திரம் தான் புராணம். ஆத்மலாபமான சரித்திரங்களைப் புராணம் சொல்லுகிறது.

## 45

வேதத்திலிருப்பதை எல்லோருக்கும் நன்றாக விளங்க வைப்பது பதினெட்டுபுராணங்கள். பதினெட்டு உப புராணங்கள் வேறே இருக்கின்றன. பதினெட்டு புராணங் களும் சேர்ந்து 4 லக்ஷம் கிரந்தம். ஒரு கிரந்தம் என்பது 32 எழுத்துக்கள் கொண்டது. பதினேழு புராணங்கள் 3 லக்ஷம் கொண்டவை. மிகுதியுள்ள 1 லக்ஷ கிரந்தமும் ஸ்காந்த புராணம். பரமசிவனைப் பற்றிச் சொல்பவை 10 புராணங்கள். அவைகளுள் ஒன்றே லக்ஷம் கிரந்தம் உடையது.

## 46

ஒரு காரியம் ஆகவேண்டுமானால் அதை மூன்று தினுஸாகச் செய்யச் சொல்லுவார்கள். உத்தரவு ஒன்று. அதைக்கேட்டுப் பயந்து சிலர் பண்ணுவார்கள். சிநேகிதன் சொல்லுவதானால் அது லகுவாக இருக்கும். பத்தினி சொன்னால் எத்தனை பாரமானாலும் லேசாகி விடும். வேதம் ஆக்ஞை செய்கிறது. அது பிரபுஸம்மிதம். ஸுஹ்ருத் ஸம்மிதம் புராணம் அதாவது சிநேகிதனைப்போல வேதத்தி லுள்ளவைகளையே சுலபமாகத் தெரிவிக்கிறது. அதே விஷயத்தைப் பலவிதமான கற்பனைகளோடு இன்னும் சுலபமாகச் சொல்வது காவியம். இது காந்தா ஸம்மிதம் எனப்படும். சொல்லாமலே சொல்லி நமக்குத் தோன்றும் படிச் செய்கின்ற புராணங்கள் நாம் மேல் நடக்க வேண்டிய விதத்திற்கு ஸாதனமாய் இருப்பதனால் அதை நாம் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

## 47

நேரே வேதத்தைப் பார்த்து கர்மாநுஷ்டானம் செய்வது கஷ்டம். வேதத்திற்கு அர்த்தம் சொல்லுவதே கஷ்டம். ஆகையினால் நம்முடைய அனுஷ்டானத்திற்கு உபயோகமான விஷயங்களை சுலபமாய் எடுத்துச் சொல்லும் சாஸ்த்ரங்கள் இருக்கின்றன. அவைகள் ஸ்ம்ருதி என்று சொல்லப்படும். மனு, யாக்ஞவல்க்யர், பராசரர், கௌதமர், ஹாரிதர், யமன், விஷ்ணு முதலியவர்கள் ஸ்ம்ருதிகளைச் செய்திருக்கிறார்கள்.

## 48

பர்த்தாவை பதிவிரதை பின்பற்றுவதை வேத அர்த்தத்தினின்றும் வழுவாமல் ஸ்ம்ருதி போவதுபோல் போனாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்பொழுதும் உபமானமானது உபமேயத்தை விட உயர்ந்ததாக இருக்க வேண்டும். அதனால் பர்த்தாவை பதிவிரதை பின்பற்றுவதை விட அதிகமாகவே ஸ்ம்ருதி ச்ருதியை பின்பற்றும். 'உபமா காளிதாசஸ்ய' என்று உபமானம் சொல்லுவதில் அதிச்ரேஷ்டனாகச் சொல்லப்படுகிற காளிதாசனே இந்த விஷயத்தை உபமானமாகச் சொல்லியிருக்கிறான். அதனால் ஸ்ம்ருதியானது ச்ருதி அர்த்தத்தினின்றும் வழுவாமல் சொல்லுவது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

## 49

ஈசுவரன் நமக்கு ஐசுவரியத்தைக் கொடுக்கிறான். அதை வைத்துக் கொண்டு பரோபகாரம் செய்யவேண்டும். தங்கள் தங்கள் சக்திக்கு ஏற்றபடி ஒரு தர்மத்தை செய்ய வேண்டும். ஒவ்வொருவரும் தங்கள் தங்களால் முடிந்த பரோபகாரத்தைச் செய்து வந்தால் உலகத்தில் துக்கமே இருக்காது.

## 50

தெரியாத விஷயத்தைத் தெரிந்து கொள்ள நமக்கு அநேக கருவிகள் இருக்கின்றன. கண்ணினால் சிலவற்றைத்

தெரிந்து கொள்கிறோம். காதால் சிலவற்றைத் தெரிந்து கொள்கிறோம். ஊஹத்தால் சில தெரிகின்றன. அமெரிக்காவில் நடக்கிற சமாசாரங்களைத் தந்தி, பத்திரிகை முதலியவற்றால் தெரிந்து கொள்கிறோம். லோகத்தில் உள்ள கருவிகளால் தெரிந்து கொள்ளக் கூடாததைத் தெரிந்துகொள்ள ஒரு பத்திரிகை வேண்டும். எது இந்தக் கருவிகளால் தெரிந்து கொள்ள முடியாததோ எந்த ஊரிலிருந்து தந்தி வராதோ அங்கே உள்ள விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் அறிவுக்குத்தான் வேதம் என்று பெயர்.

## 51

பாபத்தை ஒரே க்ஷணத்தில் த்வம்ஸம் பண்ணும் ஒரு வஸ்து உண்டு. இரண்டு எழுத்துக்களாலான பெயர் அது. ஸகல வேதங்களுக்கும் மத்தியில் இருப்பது அது. அதுவே வேதங்களின் ஜீவரத்னம். கோயிலில் மஹாலிங்கம் போலவும் தேஹத்தில் உயிர் போலவும் அது வேதங்களின் மத்தியில் இருக்கிறது. (சிவ என்ற இரண்டு எழுத்துக்களே அது) அதை ஒரு தரம் சொன்னால் போதும். வேறு ஒரு காரியத்துக்கு நடுவிலும் சொல்லலாம். சொன்னால் அந்த க்ஷணத்திலேயே பாபத்தைப் போக்கிவிடும்.

## 52

பரமேச்வரனுடைய கீர்த்தியை நாம் வாக்கினால் சொல்லுவதனாலும் கேட்பதனாலும் பவித்திரர்களாகிறோம். அவருடைய ஆக்ஞையை யாரும் மீற முடியாது. அஹம்பாவமாக இருக்கும்போது அவர் சிக்ஷிக்கிறார். குழந்தைகள் ஏதாவது தப்பு செய்தால் நாம் அடிக்கிறோம். அதுபோல பரமேச்வரன் தேவதைகளை சிக்ஷித்தார். காளகூட விஷம் பாற்கடலில் உண்டானபொழுது அதைச் சாப்பிட்டு ரக்ஷித்தார். ஸகல தேவதைகளும் பரமேச்வரனுடைய குழந்தைகளே.

## 53

பரமேச்வரன் ஓங்காரம். ஸ்வரூப ப்ரம்மமும் ஓங்காரந் தான். அதனுடைய அர்த்தத்தை விசாரிக்கும் ஓர் உபநிஷத்தே தனியாக இருக்கிறது. அதற்கு மாண்டூக்யோபநிஷத் என்று பெயர். அதில் சாந்தம், சிவம், அத்வைதம், சதுர்த்தம் மன்யந்தே என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிவஸ்வரூபம்தான் பரப்பிரம்மம். ப்ரதோஷ காலத்தில் ஈச்வர தரிசனம் செய்ய வேண்டும். ஈச்வரன் கோயிலில் ப்ரதோஷ காலத்தில் எல்லாத் தேவர்களும் வந்து ஈச்வர தரிசனம் செய்கிறார்கள்.

## 54

ஸாங்க்ய ஸூத்ரத்தில் ஈச்வரன் மூன்று கண் உள்ளவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அமரமும் அப்படியே சொல்லுகிறது. லோகத்தில் ஈச்வரன் என்ற சப்தம் சிவனுக்கே வழங்கப்படுகிறது. அவன் மஹாபுருஷன். ப்ரம்ம ஸூத்ரத்தில் 'சப்தாதேவப்ரமித:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஈசானன் என்னும் சப்தத்திற்கு எது அர்த்தமோ அதுதான் பரமேச்வர ரூபம்.

## 55

'சிவ' என்பதையே கொஞ்சம் நீட்டி 'சிவா' என்று சொன்னால் அது அம்பிகையின் பெயராகும். பரமசிவனுக்கு இரண்டு சரீரங்கள் இருக்கின்றன. ஒன்று பரமமங்கள ஸ்வரூபம். மற்றொன்று எலும்பை அணிந்து கொண்டு ஜடாதாரியாக இருக்கிற ஸ்வரூபம். ஸர்வமங்களா என்பது அம்பாளின் பெயர். அந்த அம்பாள் தான் உயிர். இந்த இரண்டு ஸ்வரூபங்களும் லோகத்தில் எல்லோருக்கும் பிதாவாகவும் மாதாவாகவும் இருக்கின்றன.

## 56

நம்முடைய ஆசார்ய சுவாமிகள் ப்ரச்னோத்ர ரத்ன மாலிகா என்ற க்ரந்தத்தில் ஒரு கேள்வி கேட்கிறார். கோ

ப்ராம்மணோருபாஸ்ய:? காயத்ரி அர்காக்நி கோசர: சம்பு:
எந்த வஸ்து காயத்ரி, அக்நி, அர்க்கன் (ஸூர்யன்) என்னும்
மூன்றிலும் ப்ரகாசிக்கிறது? சிவன்தான். காயத்ரியின்
பரம தாத்பர்யமாயிருப்பவர் அவரே. ஸூர்யனிடத்தில்
ப்ரகாசிப்பவரும் அவர் தான். ஸ்ரீ ருத்ரத்தில் பரமேச்வரன்
அக்னி ஸ்வரூபியாக இருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்
கிறது. எனவே இந்த மூன்றிலும் பரமேச்வரனை ஆராதிக்க
வேண்டும்.

## 57

விவாஹ காலத்தில் அம்பாளை அவசியம் ஆராதிக்க
வேண்டும். ருக்மணி ஸ்ரீ க்ருஷ்ணன் பர்த்தாவாக வர
வேண்டுமென்று அம்பிகையை ஆராதித்தாள். அம்பிகை
யின் ஆராதனத்தால் பதிபக்தியும் குருபக்தியும் உண்டா
கும். அதற்காகத்தான் ருக்மணி பூஜை செய்தாள்.

## 58

ஜகத்துக்குத் தாயாகவும் கருணையுடையவளாகவும்
இருக்கும் பரதேவதையிடம் பக்தி இருக்க வேண்டும்.
எப்படி குழந்தைக்கு வேண்டியதைத் தாய் தருவாளோ
அப்படி அம்பிகை லோகத்தில் வித்தை, பணம் முதலிய
வைகளை அடையச் செய்து பின்பு தானுகப் பழுத்துப்
பரமானந்தத்தைப் பெறும்படி அனுக்ரஹம் செய்வாள்.

## 59

அம்பாளுக்கும் பரமேச்வரனுக்கும் உள்ள ஸம்பந்தம்
எப்பேர்ப்பட்டதென்றால் சரீர சரீரி பாவ ஸம்பந்தம்
அல்லது சேஷ சேஷி பாவ ஸம்பந்தம். உடலும் உயிரும்
எப்படியோ அப்படித் தான் சரீர சரீரி பாவமும். இந்த
உடலுக்கு உயிர் இருக்கிறது. இந்த உயிருக்கு இன்னோர்
உயிர் ஆதாரமாக இருந்தால் அதைத்தான் உயிருக்கு
உயிராய் இருப்பது என்று சொல்வர். பரமேச்வரன்

உயிர் என்றால் அந்த உயிருக்கு உடம்பு எது? அம்பாள் தான். 'சரீரம் த்வம் சம்போ:' என்று ஆசார்யாள் அம்பாளைப் பார்த்துச் சொல்லுகிறார்.

## 60

ஸர்வ ஜகத்தும் பரமேச்வரனுடைய சரீரம். அதற்கு அப்படியே கவசம் மாதிரி இருப்பது அம்பிகை சரீரம். அப்படி இருக்கும்படியான நிலையில் பஞ்ச பூதங்களுக்கும் மேலே மனஸு என்று ஒன்று இருக்கிறதே அதுவும் நீ தான். ஆகாசமும் நீ தான். அக்னியும் காற்றும் ஜலமும் பூமியும் நீ தான். நீயே எல்லா ஸ்வரூபமாகவும் ஆகி யிருக்கிறாய். கொஞ்சம் கொஞ்சம் எங்களிடத்திலிருக்கும் படியான ஞானம், ஆனந்தம் எல்லாவற்றுக்கும் ஆதாரமாக சிதானந்த ஸ்வரூபமாக இருப்பவளும் நீதான். ஸமஸ்த ப்ரபஞ்சமும் உன் பரிணாமத்தைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. சிவன் சரீரி, நீ அவனுக்குச் சரீரம். சிவ யுவதி பாவம் உங்கள் இரண்டு பேரிடத்திலும் இருக்கிறது. இப்படி ஆசார்யாள் ஸௌந்தர்யலஹரியில் சொல்லியிருக் கிறார்கள்.

## 61

ஸரியான காலத்தில் உசிதமாக ஸந்த்யானுஷ்டானம் பண்ணினதால்தான் பலர் ரிஷிகள் ஆனார்கள். அபிவா தனத்தில் எந்த மஹரிஷியினுடைய ஸந்ததியில் பிறந்திருக் கிறோமோ அந்த மஹரிஷி கோத்திரத்தைச் சொல்லி அன்று முதல் காயத்ரி ஜபிக்கப்பட்டு வருகிறது. அந்த கோத்திரத் தில் பிறந்ததற்காகவாவது கர்மானுஷ்டானங்களைச் செய்ய வேண்டியது நமது கடமை.

## 62

தொடர்ச்சியாக வந்த தாரையை நாம் அறுத்து விடக் கூடாது. ப்ராணாயாமத்தோடு சித்த ஏகாக்ரத்தோடு

மந்த்ரலோபமில்லாமல் பரமேச்வரார்ப்பணம் பண்ணி எல்லாவற்றையும் (கர்மானுஷ்டானங்கள்) பண்ணவேண்டும். பக்தி ச்ரத்தையோடு கர்ம கலாபத்தோடு பண்ண வேண்டும். அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

## 63

காயத்ரி என்னும் வார்த்தைக்கு எவர்கள் தன்னை கானம் பண்ணுகிறார்களோ அவர்களை ரக்ஷிப்பது என்பது அர்த்தம். கானம் பண்ணுவது என்பது ப்ரேமையுடனும் பக்தியுடனும் உச்சரிப்பதாகும். யார் தன்னைப் பயபக்தியுடனும் ப்ரேமையுடனும் உச்சாரணம் செய்கிறார்களோ அவர்களை காயத்ரி மந்த்ரம் ரக்ஷிக்கும்.

## 64

வேதத்தில் காயத்ரியைப் பற்றிச் சொல்லும்போது 'காயத்ரீம் சந்தஸாம் மாதா' என்று இருக்கிறது. சந்தஸ் என்பது வேதம். வேத மந்திரங்களுக்கெல்லாம் தாயார் ஸ்தானம் காயத்ரீ என்று வேதம் சொல்லுகிறது. சாஸ்திரப் பிரகாரம் செய்ய வேண்டிய கார்யங்களுக்கெல்லாம் முக்யமான காரியம் இது என்று சொல்லும் பொழுது வேதம் மந்திர சக்தி குறையாமல் தேஹத்தை சுத்தியாக வைத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறது.

## 65

தேஹம் ஒரு தேவாலயம். ஜீவன் ஈச்வரஸ்வரூபம். ஆலயத்தில் அஸுத்தமான பதார்த்தங்களைக் கொண்டு போக முடியாது. அப்படியே தேஹம் ஒரு தேவாலயமானால் அதிலும் அஸுத்தமான பதார்த்தங்களை சேர்க்கக்கூடாது. மந்த்ரசக்தி இருக்கிற சரீரத்தில் அஸுத்தியானவைகளைச் சேர்த்தால் அது கெட்டு விடும்.

## 66

நம்முடைய மந்திர சக்தியைக் காப்பாற்றிக் கொண்டு வந்தால் அது எல்லோருக்கும் க்ஷேமத்தை உண்டாக்கும்

மந்திர சக்தியாகிற அக்னி இப்போது அணைந்திருக்கிறது. தேஹம் விகாரமாய்விட்டது. அஸுத்தமான பதார்த்தங்கள் சேர்க்கப்படுகின்றன. ஆனால் ஒரு பொறி மட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி பண்ண வேண்டும். அப்படிச் செய்தால் எப்பொழுதாவது பற்றிக் கொள்ளும். அந்த நெருப்புத்தான் காயத்ரீ.

## 67

அந்த நெருப்புப் பொறியை ஊதி பெரியது பண்ண வேண்டும். நெருப்புப் பொறி எதற்கும் உபயோகப்படாது. ஆனால் உபயோகப்படுவதற்கு ஆதாரம் இருக்கிறது. ஆகையால் ஞாயிற்றுக் கிழமையாவது ஆயிரம் காயத்ரீ பண்ண வேண்டும். ஒவ்வொரு காலத்திலும் பத்து காயத்ரீக் களையாவது பண்ண வேண்டும்.

## 68

மூன்று காலமும் சாந்தம் உண்டாகிற காலம். காலை' உச்சி, மாலை என்னும் இந்த மூன்று காலங்களிலும் காயத்ரீ' சாவித்ரீ, சரஸ்வதீ என்று மூன்று ப்ரகாரமாகத்யானம் பண்ண வேண்டும். காலை விஷ்ணு ப்ரதானமானது. மத்யான்னம் ப்ரம்ம ப்ரதானமானது. சாயங்காலம் சிவ ப்ரதானமானது. ஆகையால் காலையில் விஷ்ணு ரூபிணியாகவும், மத்யான்னம் ப்ரம்ம ரூபிணியாகவும், சாயங்காலம் சிவரூபிணியாகவும் த்யானம் செய்ய வேண்டும்.

## 69

காயத்ரீயில் ஸகல வேதமந்திர சக்தியும் அடங்கியிருக்கிறது. எல்லா மந்திரங்களுக்கும் சக்தியைக் கொடுப்பது அதுதான். அதை ஜபிக்காவிட்டால் வேறு மந்த்ர ஜபத்திற்கு சக்தியில்லை. ஹிப்னாடிஸம் என்பதனால் பல காரியங்களைச் செய்கிறார்கள். மோக்ஷத்திற்குப் போக உதவும் ஹிப்னாடிஸம் காயத்ரீ. ஆசை அடங்கி ஜன்மம் எடுத்ததின்

பலனை அடையச் செய்யும் ஹிப்னுடிஸம் காயத்ரீ. லோக காரியங்களைக் குறைத்துக் கொண்டு அதை அதிகமாகச் செய்ய வேண்டும் என்ற வ்ரதத்தை வைத்துக் கொண்டு சரீரத்தைப் பரிசுத்தமாக ரக்ஷித்து வரவேண்டும். காயத்ரீ என்னும் பொறியானது அப்போதுதான் அணையாம லிருக்கும்.

## 70

ஜ்வரம் வந்தால் அதற்கு மருந்து அவசியம். அது போல ஆத்மாவுக்கு உபயோகமான காயத்ரீயும் மிகவும் முக்யமானது. அதை எந்தக் காலத்திலும் விடக்கூடாது. மருந்தை விட அதுதான் முக்யமானது. ஒரு நாளாவது ஸந்த்யாவந்தனத்தை விட்டுவிட்டோமென்று இருக்கக் கூடாது. காயத்ரீயை மாதா என்று வேதம் சொல்லுகிறது.

## 71

ப்ரதோஷ காலத்தில் எல்லோரும் சிவஸ்மரணம் பண்ண வேண்டும். மனதினாலும் வாக்கினாலும் சிவ என்ற இரண்டு அக்ஷரங்களைத் தியானித்துச் சொல்லவேண்டும். நித்யம் ஸந்த்யா காலம் ப்ரதோஷ காலமாகும். த்ரயோதசி ஸந்த்யா காலத்தில் இருக்கிறது மஹாப்ரதோஷ கால மாகும். நித்யமும் ஸாயங்காலத்தில் ஐந்து நிமிஷமாவது சிவஸ்மரணை பண்ணிக்கொண்டு வர எல்லோரும் ஸங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். ஆயுள் பர்யந்தம் செய்வதாக ஸங்கல்பம் செய்து கொண்டு மனதினால் ஸ்மரணம் பண்ணிக் கொண்டு வாக்கினால் சிவநாமாவைச் சொல்ல வேண்டும்.

## 72

வீட்டில் உட்கார்ந்திருக்கிறோம். போஜனத்திற்கு அரிசி நெய் வேண்டும். உட்கார்ந்திருந்தால் வருமா? வயலுக்குப் போய்க் கவனித்து வரவேண்டும். கஷ்டப் பட்டுப் பிரயத்தனம் பண்ணினால் தான் பின்பு சுகம்

ஏற்படும். அதைப் போலப் பாபம், துக்கம் இவைகளை அநுபவித்தால் தான் சுகம் உண்டு. அவைகளை அனுபவிக்கும் மனுஷிய ஜன்மத்தில் தான் சுகத்துக்குக் காரியங்கள் செய்ய வேண்டும். மனுஷ்ய ஜன்மம் சரியாக உபயோகப்பட்டால் ஜன்மஸாபல்யம் உண்டாகிறது. இல்லாவிட்டால் பாபம் ஏற்படுகிறது. புத்தியை நிந்தைக்கும் உபயோகப்படுத்தலாம். ஸ்தோத்திரத்துக்கும் உபயோகிக்கலாம்.

## 73

உஷ்ணத்தினுல் உருக்கப்பட்ட நெய்யை நிறமற்றதாகக் காண்கிறோம். அதே நெய் குளிர்ந்தவுடன் வேறொரு நிறத்தையடைகிறது. ஈசனை உருவமற்றவர் அரூபி எனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனுல் பக்தர்களின் உள்ளத்தில் ஈசன்பால் அன்பு பரிபூரணமாக விளங்கும் பொழுது அந்தக் குளிர்ந்த நிலையில் உருவம் இல்லாத கடவுளும் அவர்களது பக்திக்குக்கட்டுண்டு அவர்களை உய்விக்க ஓர் உருவத்தை அடைகிருர்.

## 74

ஓரிடத்தில் ஆபரணம் ஏதுவுமின்றி இயற்கை எழிலுடன் ஈசன் பிக்ஷாண்டார் மூர்த்தியாகத் திருக்கோலம் கொள்ளுகிருர். மற்ருெரு புறம் அழகே உருக்கொண்ட சுந்தரேச்வரராக அவர் காக்ஷியளிக்கிருர். அதே கடவுள் பயமுள்ளவர்களுக்குப் பயத்தைப் போக்கி அபயத்தை அளிக்கும் பைரவ மூர்த்தியாகத் தோன்றுகிருர். வீரத்தை காண்பிக்கும் நிலையில் அவரே வீரபத்திரராகவும் காக்ஷியளிக்கிருர். தேவர்கள் விரும்பிய ஆனந்தத்தைக் கொடுக்க சிற்சபையில் அந்த ஈசனே நடனமாடுகிருர். எல்லாவற்றிலும் உயர்ந்ததான ஞானத்தைக் கொடுக்கும் தெய்வமாக தக்ஷிணுமூர்த்தி வடிவத்துடன் அமர்ந்து மௌனத்தினுல் சனகாதி முனிவர்களுக்கு அவரே

உபதேசம் அருளுகிறார். இவைகளெல்லாம் பரமசிவனின் திருக்கோலங்கள்.

## 75

இக்காலத்தில் நவீன சாஸ்திரங்களைக் கற்றவர்கள் அனேக விசித்ரமான வஸ்துக்களைச் செய்கிறார்கள். ஆனால் சிருஷ்டியில் உள்ள வஸ்துக்களை வைத்துக் கொண்டுதான் அவர்கள் வேறு வஸ்துக்களைச் செய்யமுடிகிறது. ஈச்வரன் சிருஷ்டித்த இந்த வாழை இலையை அவர்கள் செய்ய முடியாது. ஈச்வரனுடைய வல்லமையை இந்த ஒரு விஷயமே காட்டுகிறது.

## 76

ஒருவரிடத்தில் பிரியம் வருகிற போது எல்லாவற்றையும் அவருக்கு அர்ப்பணம் செய்கிறோம். ஸ்வாமிக்குப் பொருள்களை அபிஷேகம் செய்து எதற்காக வீணாக்குகிறது என்று நினைக்கையில் பணத்தைப் பெரிதாக நினைக்கிறோம். வாஸ்தவ அன்பு வந்ததற்கு அடையாளம் தனது பொருள்களை அர்ப்பணம் செய்வதே. குழந்தைக்காக ஏன் செலவு செய்கிறோம் என்று ஒருவர் சொன்னால் அது தகப்பன் காதில் விழாது. பக்தி முக்திக்குப் பூர்வாங்கம். நமது தேஹம், வாழ்நாள், பொருள் ஆகியவற்றைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். ஆழ்வார்கள், நாயன்மார்கள் அப்படியே செய்தவர்கள்.

## 77

இப்பொழுதுள்ள லோகநிலைமையில் நாஸ்திக புத்தி தீவிரமாக உள்ள வீடுகளிலும் ஸ்த்ரீகள் நைந்து உருகுகிறார்கள். அவர்களுக்கு பக்தி இருக்கிற வரையில் நமது மதத்திற்கு ஹானி ஏற்பட மாட்டாது. நமது தர்மம் கெடாது. தம்முடைய ஸஹோதரன் நாஸ்திகனாகி விட்ட காலத்தில் திலகவதியார் பிரார்த்தித்ததற்கு இரங்கியே பரம கருணாநிதி அவரைச் சைவத்திற்குத் திருப்பினார்.

தம்முடைய புருஷன் நாஸ்திகனுகி விட்டதைப் பொறுது மங்கையர்க்கரசியார் துன்பப்பட்டதற்கு இரங்கியே பரமேச்வரன் அனுக்ரஹித்தார். ஸ்த்ரீகள் நமது கோவில் களில் ஸந்நிதானத்தில் பிரார்த்திக்கும் வரையில் பாதகம் இல்லை. புருஷர்கள் வெள்ளைக்கார தேசங்களின் ஆசாரங் களைப் பார்த்து புரண்டு போய் விடுகிருர்கள். ஆனல் ஸ்த்ரீ களின் உறுதி அசைவதில்லை.

**78**

பல நதிகள் பல திசைகளில் ஓடுகின்றன. எல்லாம் முடிவிலே கடலில் கலக்கின்றன. அவை சேரும் இடம் ஒன்றே. அதைப் போல் பலவழிகளில் இறைவனை வழி படுகின்ருேம். வழிபடும் பாதைகளில் வேற்றுமை இருக்க லாம். ஆயினும் நம்மை ஆட்கொள்ளும் வஸ்து அதாவது கடவுள் ஒன்றே.

**79**

பிறவியின் பயன் யாரிடமாவது ஒருத்தரிடம் மாருத ப்ரியம் வைப்பது தான். ஆனல் நாம் ப்ரியம் வைக்கிற பொருள் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும்? நம்மோடு எந்தக்காலத்திலும் சண்டைக்கு வராததாக இருக்க வேண்டும். நம்மை விட்டு எந்தக் காலத்திலும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அழியாத வஸ்துவி னிடத்தில் ப்ரியம் வைத்தால் அந்த ப்ரியம் அழியாம விருக்கும்.

**80**

நாம் நம்முடைய மனம் சுத்தமாக இருப்பதற்காக, நித்திய ச்ரேயஸ்ஸை அடைவதற்காக பகவத் பாதத்தை— ஆசார்யரூபமான சரணத்தை—தியானம் பண்ண வேண் டும். மனது அதற்குத் தான் ஏற்பட்ட இடம். எத்தனை நாழிகை செய்ய முடியுமோ அவ்வளவு நாழிகை தியானம் செய்ய வேண்டும். நம்முடைய பழக்கத்துக்கு உட்பட்ட

வர்களையும் செய்யும்படிச் சொல்ல வேண்டும். மற்ற காரியங்களையெல்லாம் குறுக்கிக் கொள்ள வேண்டும். மனத்தினால் ஈச்வரனது பாதத்தியானம் செய்ய எவ்வளவு காலம் கிடைக்கிறதோ அவ்வளவு காலமும் தியானம் செய்ய வேண்டும்.

## 81

சுவாமி எங்கும் இருக்கிறார்; அவரை ஒரு கல்லில் வைப்பானேன்? என்று கேட்கலாம். எங்கும் அவர் இருப்பதாகச் சொல்லுகிறோமாயினும் எங்கும் அவர் இருக்கிறார் என்ற நினைவு மனதில் இல்லை. சுவாமிஎங்கும் இருக்கிறார் என்ற எண்ணம் இருந்துவிடின் பொய் சொல்லுவானா? கெட்ட காரியம் செய்வானா? எங்கும் அவர் இருப்பது உண்மையே. அவர் இருப்பது மாத்திரம் நமக்குப் போதாது. அவருடைய அருளைப் பெறவேண்டும். அதற்கு அவரை எப்படி உபாஸிப்பது? அதைத்தான் ஆகமம் சொல்லுகிறது. ஸூர்ய கிரணம் இருக்கிறது. ஒவ்வொரு கிரணமும் நெருப்பே. ஆனால் ஒரு துணியை வெய்யிலில் காட்டினால் அதில் தீப்பற்றிக் கொள்ளவில்லை. லென்ஸ் என்ற பூதக் கண்ணாடியை வெய்யிலில் காட்டி அதன் கீழ் ஒரு துணியைப் பிடித்தால் அதில் தீப்பற்றிக் கொள்கிறது. பூதக் கண்ணாடி அநேக கிரணங்களை ஒரு மிக்கக் குவிக்கிறது. மின்சார சக்தி (Electricity) எங்கும் இருக்கிறது. அதை வெளிப்படுத்த ஒரு சக்தி ஸ்தாபனம் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. அப்படியே எங்குமுள்ள ஈச்வரனுடைய அருள் நமக்குக் கிடைக்கும்படிச் செய்ய ஆலயம் அவசியமாக இருக்கிறது.

## 82

அதிக வேஷம், பெரிய வீடு, நாகரிகம் இவைகளால் பாபம் தான் அதிகமாகிறது. சிலர் நாகரிகத்தை அதிகப் படுத்தி எல்லாவற்றையும் தின்றுகொண்டு அதிக பாபத்

தைச் செய்கிறார்கள். ஆகையால் குறைவான பதார்த்தங்களை வைத்துக்கொண்டு சாந்தமாக இருந்து கொண்டு புத்தியால் நல்லதை நினைத்துக்கொண்டு இருக்கவேண்டும் நமக்கு ஒரு வஸ்துவினிடத்தில் ஆசை உண்டாகிறது. அந்த வஸ்துவை எப்படிப் பெறுவது என்று யோசித்து முயல்கின்றோம். அதில் பாபம் உண்டாகிறது. அந்த ஆசை இல்லாமலிருக்க எது மார்க்கமோ அதில் புத்தியை உபயோகப்படுத்தினால் பாபம் போகும். ஜன்மம் போய் விடும். ஆசையைப் பூர்த்திசெய்யத்தொடங்கினால் ஜன்மம் அதிகமாகும். அதை நீக்க உபயோகித்தால் பரமேச்வரன் எதற்குப் புத்தியைக் கொடுத்தானோ அதைச் செய்தவர்களாவோம். புத்தி, விபி, பாஷை இவைகளெல்லாம் ஜன்மம் அல்லாத நிலையை அடைய ஸாதனங்கள்.

## 83

கோடி கோடி மக்கள் வீணாகப்போனாலும் ஒருவன் பூர்ணத்வம் அடைந்து விட்டால் அது தான் நம்முடைய மதத்தின் பிரயோஜனம். அவன் ஒருவன் அனுக்ரஹத்தாலேயே உலகம் க்ஷேமமடையும். அப்படிப்பட்ட ஒருவன் உண்டாவதற்காகத் தான் நாம் பிரசாரங்களைச் செய்கிறோம். ஜனங்களுக்கு மதத்தில் பக்தியை உண்டு பண்ணுகிறோம்.

## 84

துணி அழுக்கில்லாமல் இருந்தால் போதாது. உடம்பும் வீடும் அழுக்கில்லாமலிருந்தால் போதாது. நம் மனமும் அழுக்கில்லாமல் ஆக வேண்டும். நாம் நல்வழியில் நிறைவு பெறவேண்டும். அப்போது தான் பிறருக்குச் சொல்ல யோக்யதை இருக்கும். என்னிடம் குறை இருந்தால் நான் சொல்லுவது பிறரை ஏமாற்றுவது போலத்தான். அவரவர்கள் நிறைவை உண்டு பண்ணிக் கொள்ள வேண்டும் என்பது தான் நமது மதம். அதனால் தான் நமது மதத்தை ரக்ஷிக்கப் பிறமதத்தினர் அனுஷ்டிக்கும் முறைகளை நாம்

கையாளுவதில்லை. காயத்ரீ, பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் இப்படி அவரவர்கள் தங்களுக்கு உபதேசமான மந்திரத்தைத தியானம் பண்ணிக் கொண்டிருந்தால் இன்னொரு மததத்தைப் பற்றிய அவசியம் ஒன்றுமே ஏற்படாது. அதைப் பண்ணுமல் வெறும் பிரசாரம் பண்ணுவதால் மட்டும் மததத்தை வளர்க்க முடியாது.

## 85

மனிதனல் ஒரு புல்லைக் கூட சிருஷ்டி செய்ய முடியாது. எனவே நாம் உட்கொள்வதை அல்லது அணிவதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யாமலிருப்பது நன்றி கெட்ட செயலாகும். சிறந்தவற்றைத்தான் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். எல்லோருமே வீட்டில் பூஜை செய்து ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்ய முடியாது. அதற்குத் தான் ஆலயங்கள் உள்ளன.

## 86

மனம் ஒரு பூதம் போன்றது. விக்கிரமாதித்தன் கதையில் சொல்லப்பட்ட வேதாளத்தைப் போன்றது. வேதாளம் கட்டுப்பட்ட பின்பு எவ்வளவு காரியங்களைச் செய்ததோ அதைப்போலவே மனமும் செய்யும். அந்த மனத்தை நாம் சுவாதீனப்படுத்துவது தான் யோகம் என்பது. அந்த யோகத்திற்கு அங்கம் அஹிம்ஸை. மனத்தை வசப்படுத்தியவர்கள், அஹிம்ஸையை அனுஸரித்தோம் மனம் வசப்பட்டது என்று சொல்லுகிறார்கள்.

## 87

உலகத்தில் பாவம் பண்ணுமல் இருக்கிறவன் யாராவது உண்டா என்றால் குழந்தை அல்லது பைத்தியக்காரன் தான். ஞானிகளின் உயர்ந்த நிலைக்கு உதாரணம் 'பாலோன் மத்தவத' என்று சொல்லுவார்கள். பாலன் என்றால் குழந்தை. உன்மத்தன் என்றால் பைத்தியம். உன்மாதம் என்றால் தலைக்கு மேல் ஏறிப் போகிற பித்தம். உன்மா

தத்தை உடையவன் உன்மத்தன். ஈசுவரனுக்கு உன்மத்த சேகரன் என்று பெயர். உன்மத்தம் என்றால் ஊமத்தம் பூ. சம்ஸ்க்ருதத்தில் ஊமத்தைக்கு உன்மத்தம் என்று பெயர். ஊமத்தம் பூவை அவன் தரித்துக் கொண்டிருக்கிறான் அதில் சிவனுக்கு அதிகப்பிரியம். உன்மத்தசேகரன் என்பதற்கு இரண்டாவது அர்த்தம் பைத்தியத்துக்குள் தலைவன் என்பது. பைத்தியக்கார வேஷம் போடுவதில் சிவனுக்குப் பிரியம்.

## 88

பரமசிவனுக்கு உரிய ஐந்து அடையாளங்களில் பஸ்மமாகிய விபூதி ஒன்று. அவனுக்குப் பிரியமான மற்றோர் அடையாளம் ருத்ராக்ஷம், பில்வம் மற்றொன்று. பில்வம் மஹாலக்ஷ்மி வாஸம் செய்யும் விருக்ஷம். பஸ்மம் ஸத்திய ஸ்வரூபமானது. அதை ஸாக்ஷாத் பரமசிவனுடைய ஸ்வரூபமே என்று சொல்ல வேண்டும். ப்ரபஞ்சமெல்லாம் நசித்தாலும் தான் அழியாமல் இருப்பவன் பரமசிவன். உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் எரிந்து போனால் பஸ்மமாகி விடுகிறது. அதை எரித்தால் அது அழிவதில்லை. சிவஸ்வரூபமும் அத்தகையதே.

## 89

ருத்ராக்ஷத்தின் பெருமை மிக அதிகம். ருத்ராக்ஷத்தைச் சிவபெருமானுடைய அடையாளமாகப் பெரியவர்கள் சொல்லுகிறார்கள். ருத்ரனுடைய நேத்திரம் அது. அதைத் தமிழில் 'திருக்கண்மணி' என்று சொல்லுவார்கள். ருத்ராக்ஷமாலையைத் 'திருக்கண்மணிமாலை' என்று சொல்லுவது வழக்கம். மற்ற விருக்ஷங்களுடைய விதைகளுக்கு இல்லாத ஒரு சிறப்பு இந்த ருத்ராக்ஷத்திற்கு உண்டு. இயற்கையில் துளையோடு உண்டாவது ருத்ராக்ஷம் ஒன்று தான். இந்த ருத்ராக்ஷம் பாரத தேசத்தில் நேபாளத்தில் இருக்கிறது.

## 90

ருத்ராக்ஷத்திற்கு முகங்கள் உண்டு. ஸாதாரணமாக நாரத்தம் பழத்திற்குள் ஐந்தாறு சுளைகள் இருக்கும். அதே போல் ருத்ராக்ஷத்திலும் முகம் உண்டு. பஞ்சமுகமுடைய ருத்ராக்ஷமே அதிகம். ஆறுமுக ருத்ராக்ஷமும் உண்டு. ஏகாதசமுக ருத்ராக்ஷமுமுண்டு. ஏகாதச ருத்ரனை இருக்கும் பரமேச்வரனை நினைப்பவர்கள் அதை வாங்கிக் கொள்வார்கள். ஒரேமுகமுடைய ஏகமுக ருத்ராக்ஷமுமுண்டு. அது கிடைப்பது அரிது. இப்படி முகங்களிலே பலவகைகள் இருந்தாலும் எல்லா ருத்ராக்ஷங்களிலும் மத்தியில் த்வாரம் இருக்கும். பரமேச்வர ஸ்ருஷ்டியில் மனிதன் இதைத் தரித்து நன்மை அடைய வேண்டுமென்று இதனை உண்டாக்கியிருக்கிறார். இது சிவ சின்னங்களில் முக்ய மானது.

## 91

அறுபத்தி நான்கு கலைகள், பதினான்கு வித்தைகள் இவற்றில் நான்கு வேதங்கள் ப்ரதானமானவை. நான்கு வேதங்களுள் மூன்று வேதம் ப்ரதானமானவை. மூன்று வேதங்களுள் யஜுர் வேதம் ப்ரதானமானது. யஜுர் வேதத்திலும் மத்திய காண்டம் ப்ரதானமானது. மத்திய காண்டத்திலும் ஸ்ரீருத்ரம் ப்ரதானமானது, ஸ்ரீருத்ரத்திலும் பஞ்சாக்ஷரம் ப்ரதானமானது. பஞ்சாக்ஷரத்திலும் 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்கள் ப்ரதானமானவை. வேதத்திற்கு ஜீவாம்சமாக இருப்பவை 'சிவ' என்னும் இரண்டு அக்ஷரங்கள், பஞ்சாக்ஷர உபதேசம் நாவுக்கு ஆபரணமாக இருப்பது.

## 92

உலகத்திலுள்ள எல்லாமே சிவன் குடிமக்கள். சிவன் மஹாபிதா. நாம் எல்லோரும் யக்ஞம் செய்கிறோம். அக்னி கார்யம் இல்லாமல் வைதிக மதமே இல்லை. உலகம் முழு

வதுமே வேதம் பரவியிருந்த காலத்தில் எல்லோருமே அக்னி கார்யம் செய்தார்கள். அக்னி கார்யத்தின் கடைசியில் பஸ்மதாரணம் உண்டு. வைஷ்ணவர்களாக இருந்தால் பாஞ்சராத்ர ஆகமத்திலும் கூட ஹோமங்களுக்குப் பிறகு ஹோம பஸ்மத்தை எடுத்துத் தரித்துக் கொள்ளவேண்டும். ஸப்த த்வீபங்களிலும் வேதமே பரவியிருந்த காலத்தில் உலகம் முழுதும் பஸ்மதாரணம் செய்து கொண்டிருந்தார்கள். நாம் செய்த அபசாரங்களால் இன்றைக்கு இந்த தேசத்தைத் தவிர இதர தேசங்களில மதாந்தரங்கள் வந்து விட்டன. அதற்கு நாமே காரணம். நாம் மறுபடியும் நம்முடைய அநுஷ்டானங்களை எல்லாம் சரிவர மேற்கொள்ள வேண்டும். வைதிக மதம் முன்போலவே எல்லா இடங்களிலும் வரவேண்டும், இதற்கு நம்மிடத்தில் அநுஷ்டானம் வரவேண்டும், பஸ்மதாரணம் அவசியம். பஸ்மம் சிவஸ்வரூபம், கலியுகத்தில் எல்லா விதமான பாவங்களையும் போக்குவதற்கு பஸ்மதாரணம், ருத்திராக்ஷ தாரணம், சுத்த ஸ்படிக ஸ்வரூபத்யானம், பில்வ அர்ச்சனை இவைமிக அவசியம்.

## 93

நாம் எத்தனையோ அபசாரம் பண்ணிக் கொண்டிருந்தாலும் நமக்கெல்லாம் அனுக்ரஹம் பண்ணிக் கொண்டு பரமேச்வரன் ஸகல புவனங்களையும் ரக்ஷித்துக் கொண்டிருக்கிறுன். நாம் செய்கிற அக்கிரமத்தைப் பார்த்தோமானல் நமக்கு ஒரு வேளை அன்னம் கிடைக்கலாமா? அப்படி இருக்கிற போது நம்மைப் போன்ற ஸகல ஜீவராசிகளுக்கும் ஒவ்வொரு வேளையும் அன்னம் கிடைத்துக் கொண்டிருக்கும் படியாக நம்மிடமிருந்து ஒருவித 'பிரயோஜனத்தையும் எதிர் பார்க்காமல் ஸர்வேச்வரன் அனுக்ரஹம் செய்து கொண்டிருக்கிறுன்.

## 94

உள்ளே ஏற்படுகிற உணர்ச்சிக்கு ஏற்ப வெளியே சில காரியங்கள் நடக்கின்றன. மனஸில் துக்கமோ ஆனந்தமோ

வந்தவுடனே சுவாசம் நின்று போகிறது; மனஸ் நின்று போகிறது. மனோபாவத்திற்கும் வாக்குக்கும் ஸம்பந்தம் இருக்கிறது. அதனால் பெரியவர்கள் தங்களுடைய அனுபவத்தின் மூலமே வெளியே சில காரியங்களைச் செய்து, உள்ளே அதற்கு ஏற்ற விளைவுகளை உண்டாக்கிக் கொள்ளலாம் என்று எழுதி வைத்திருக்கிறார்கள். அதனால் தான் மிலிட்டரிக்காரன் யூனிபாரம் போட்டால் வீரத்தன்மை வருகிறது என்று சொல்லுகிறான். அப்படித் தான் பக்தி வரவேண்டும். சாந்தம் வரவேண்டும், ஸத்தியம் வர வேண்டும் என்றால் சில சின்னங்களைப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று நம்முடைய பெரியவர்கள் சொன்னார்கள். வெளியில் நாம் செய்கிற சில ஸம்ஸ்காரங்களினாலே உள்ளே சில நன்மைகள் ஏற்படுகின்றன. இவை எல்லாம் வெளி வேஷம் என்று நினைத்தால் வெறும் வேஷமாகவே போய் விடுகின்றன. ஆத்மார்த்தமாக ஜீவனைப் பரிசுத்தம் செய்து கொள்வதற்காக சின்னங்களை அணிகிறேன் என்று நினைத்தால் ஸத்தியமாக உள்ளே பரிசுத்தம் ஏற்படுகிறது. புறத்திலே தரிக்கும் சின்னங்கள் ஆத்மாவுக்கு உபயோகப் படுகின்றன.

## 95

ஸகல வஸ்துக்களும் அழிந்தாலும் கடைசியில் தான் ஒன்று மட்டுமே ஸத்தியமாக இருக்கிற பஸ்மத்தை நெற்றியிலும், ஸ்வபாவமாகத் த்வாரங்களுடனும் முகங்களுடனும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற ருத்ராக்ஷங்களைக் கழுத்திலும் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியின் வாசஸ்தலமாகிய பில்வத்தைச் சிரஸிலும் வேதத்தின் மத்யமணிக்கு நடுநாயக மணிக்கு ஒப்பாக விளங்குகிற 'சிவ' என்னும் இரண்டு அக்ஷரங்களை நாக்கிலும் சுத்த ஸ்படிக ப்ரகாச மஹா லிங்கத்தை உள்ளத்திலும் தரித்துக் கொண்டு ஜன்ம ஸாபல்யத்தை அடைய வேண்டும். நாம் எதை நினைக்கிறோமோ அது மயமாக ஆகிவிடுகிறோம். சுத்த ஸ்படிகமாக விளங்குகிற பரமேச்வரனை நினைத்தால் நம் மனஸு

சுத்த ஸ்படிமாக ஆகும். அவன் தான் எப்போதும் துக்க மென்பதே இல்லாதவனாக ஆனந்த ஸ்வரூபியாக இருக் கிறான். ஆகவே விபூதி ருத்ராக்ஷ தாரணம், பஞ்சாக்ஷர ஜபம், உள்ளே சுத்த ஸ்படிக சங்காச ரூபியாகிய பரமேச் வரனுடைய தியானம், பில்வார்ச்சனை இவற்றை எப் போதும் நாம் செய்து கொண்டேயிருக்க வேண்டும்.

## 96

ஈச்வரனைக் காட்டிலும் குரு பெரியவர். "ஈச்வர பக்தி யைக் காட்டிலும் குருபக்தி விசேஷமானது என்கிறார்களே. ஏன்?" என்று கேட்டால், ஈச்வரனை யாரும் பார்க்கவில்லை பிரத்யக்ஷமாக நாம் பார்க்கக் கூடிய ஒரு மனிதர் எப் போதும் சுத்தமாய், ஞானம் உடையவராய் அசைவு, இல்லாத சித்தம் உடையவராய் அப்பழுக்கில்லாமல் நமக்கு கிடைத்து விட்டால் நாம் எந்தக் காரியத்துக்காக ஈச்வர னிடத்தில் போகிறோமோ, அந்தக் காரியம் இவரிடம் பக்தி செலுத்தினாலே முடிந்து விடுகிறது. அதனால்தான் குருர் பிரம்மா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேச்வர: என்று சொல்லியிருக்கிறார்கள்.

## 97

யாராவது ஒரு பையன் குருவினிடத்தில் சென்று அவருக்கு சுச்ரூஷை செய்து கொண்டு படித்து வருகிறான் என்று தெரிந்தால் அவனுக்கு அங்கங்கே கொஞ்சம் உதவி செய்தாலும் போதும். பெரிய ஸ்தாபனம் வேண்டாம். வேண்டாம் என்றால ஏற்படுத்தக் கூடாது என்பதற்காகச் சொல்ல வில்லை. அது தனியாக இருக்கட்டும். கூட நாம் ஒவ்வொருவருக்கும் நம்மாலான உதவிகளைத் தனிப்பட்ட முறையில் செய்ய வேண்டுமென்ற மனோபாவம் உண்டாக வேண்டும். அது தான் அவசியம். குருபக்தி வேண்டு மென்றால் குருகுலப் படிப்பு கொஞ்சம் அவசியந்தான். நம்மால் முடிந்த அளவு அதற்கு வசதி செய்வோம். பலன் பத்து பேர்களுக்காவது ஏற்படும். அது தான் நமக்கு விதை

முதல். உலகம் க்ஷேமமாக இருக்க குருபக்தி, ஈச்வரபக்தி இவையிரண்டும் அழிந்து போகாமல் இருந்தால் போதும்.

## 98

கிருதயுகத்தில் ப்ருகு என்பவர் தம்முடைய பிதாவான வருணனிடத்தில் போய், "நிறைந்த வஸ்து எதுவோ அதை எப்படி அறிவது?" என்று கேட்டாராம். "பிரம்மம் என்பது தான் நிறைந்த வஸ்து. நிறைந்த வஸ்து எதுவோ அது காலத்தாலும் நிறைந்து இருக்க வேண்டும். தேசத்தாலும் நிறைந்து இருக்க வேண்டும். வஸ்துவிலும் நிறைந்து ஒரு குறை என்பதே இல்லாமல் இருக்கவேண்டும். அத்தகைய நிறைந்த வஸ்துவை எனக்குச் சொல்ல வேண்டும்" என்று போய் பிதாவான வருணனிடத்தில் கேட்டாராம். "நீ போய் தபஸ்பண்ணு. அது உனக்கே தெரியும்" என்று அவர் சொல்லி விட்டார்.

"அப்படியா? நான் அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி விட்டு அவர் போய்த் தபஸ்பண்ண ஆரம்பித்தார். அதனால் அவருக்கு ஒன்று தெரிந்தது. 'இந்தச் சரீரம் தான் உயர்ந்த வஸ்து. இது தான் எல்லாவற்றையும் அறிகிறது. அறியப்படுகிற பொருளைக் காட்டிலும் அறிந்து கொள்கிற பொருள் உயர்ந்தது. அது இந்த தேகந்தான்' என்று தீர்மானம்பண்ணிக் கொண்டு அப்பாவிடம் போய், "இந்தச் சரீரம் தான் உயர்ந்த நிறைந்த வஸ்து" என்று சொன்னாராம்.

அவர் திரும்பவும், 'இன்னும் கொஞ்சம் தபஸ்பண்ணு என்று சொல்லி விட்டாராம்.

இப்படியே கொஞ்சம் தபஸ் பண்ணுவது, உடனே தமக்குத் தோன்றியதைப் போய்ச் சொல்லுவது என்று ஐந்து தடவைகள் ப்ருகு செய்தாராம். தந்தையும் ஒவ்வொரு தடவையும், "இன்னும் கொஞ்சம் தபஸ் பண்ணு" என்று சொல்லியே அனுப்பி விட்டார். கடைசியாகப்

போனபோதுதான், நீங்கள் சொன்னபடி நான் இத்தனை நாளாகத் தபஸ் பண்ணினேன். இப்போதெல்லாம் இடையில் ஏதோ ஒரு விதமான ஆனந்தம் ஸ்புரிக்கிறதே. இது என்ன? என்று தந்தையைக் கேட்டாராம்.

உனக்கு ஒவ்வொரு சமயத்திலும் ஆனந்தம் ஸ்புரிக்கிறது என்று சொல்கிறாயே. அந்த ஆனந்தம் தான் நிறைந்த வஸ்து. இது உனக்குத் துளித் துளி உண்டாகிறது. இதுவே நிறைந்துவிட்டதானால் அதைத்தான் பேரானந்தம் என்கிறோம்' அந்த பேரானந்தந்தான் எப்போதும் குறைவில்லாது, காலத்திலும் தேசத்திலும் நிறைந்து இருக்கும்படியான வஸ்து'', என்று பிதா சொன்னாராம். இப்படி ஒரு கதை இருக்கிறது.

## 99

வேதத்தில் சுவாமியைப் பற்றிச் சொல்லும்போது ''எதற்கு மேல் ஒன்றும் கிடையாதோ அதுதான் சுவாமி எதற்குக் கீழே ஒன்றும் கிடையாதோ அது தான் சுவாமி. மிகப் பெரியனவற்றுக்கெல்லாம் பெரியது சுவாமி. மிகச் சிறிய அணுவுக்கெல்லாம் அணுவானது சுவாமி'' என்று வருகிறது. அப்போது நமக்கு சந்தேகம் ஒன்று வரும். 'மிகப் பெரிய பொருளுக்கெல்லாம் பெரியதான ஒன்று எப்படி மிகச் சிறியனவற்றுக்கெல்லாம் சிறியதாக இருக்க முடியும்?'' பெரியனவற்றுக்கெல்லாம் பெரியதாய் இருக்கிற வஸ்து ஒன்று சிறியனவற்றுக்கெல்லாம் சிறியதாய் இருக்கிற வஸ்து ஒன்று என்று இப்படிப் பார்த்தால், அது வேறு இது வேறு என்று கொண்டால் இரண்டு என்ற எண்ணம் வந்தால் சந்தேகம் வந்து விடும். அப்படியிருக்க முடியாது என்று தோன்றும். ஆனால் சுவாமி என்பவர் மிகப் பெரிய பொருள்களுக்கெல்லாம் பெரியதாய் இருப்பவர், மிகச் சிறியனவற்றுக்கெல்லாம் சிறியதாய் இருப்பவர் என்றால் என்ன அர்த்தம்? அவர்தாம் எல்லாமாய் இருக்கிறார். அதனால் அவரைத் தவிர வேறு ஒன்று இல்லாத

நிலே வந்து விடுகிறது. அவருக்கு மேலேயும் ஒன்றுமில்லை. கீழேயும் ஒன்றுமில்லை. அவரே எல்லாமாய் இருக்கிறார். அவரைக் காட்டிலும் பெரியதுமில்லை, சிறியதுமில்லை (தைத்ரிய ஆரண்யகம் 10-வது பிரச்னம்) சின்னதும் அவர் தான்; பெரியதும் அவர்தான், சின்னதைக் காட்டிலும் சின்னதாக, பெரியதைக் காட்டிலும் பெரியதாக இருக்கிற வர் பட்டகட்டையாக — ஸ்தாணுவாக — இருக்கிறார். அப்படி உட்கார்ந்திருப்பவர் காரியமே இல்லாமல் சாந்தமாக உட்கார்ந்திருப்பவர், ஆனந்தமாக உட்கார்ந்திருப்பவர் தக்ஷிணாமூர்த்தி.

## 100

சுவாமி இருக்கிறாரா? இருந்தால் அவர் எப்படி இருக்கிறார்? என்ன பண்ணுகிறார்? என்ற கேள்விக்கு பதிலாகக் கண்ணன் கீதையில் அர்ஜுனனுக்கு என்ன உபதேசம் பண்ணுகிறார் என்று கொஞ்சம் பார்க்கலாம். பகவான் சொல்கிறார் "அப்பா, ஈச்வரன் தான் ஒவ்வொருத்தருடைய ஹ்ருதயத்திற்குள்ளும் இருந்து அவர்களை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான்" என்று சொல்கிறார். நீங்கள் பொம்மலாட்டம் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? உள்ளே ஒருத்தன் இருந்து கொண்டு பொம்மைகளை உள்ளேயிருந்தே அநேகம் கயிறுகளைக் கட்டிக்கொண்டு அவற்றை இழுப்பதன் மூலம் ஆட வைப்பான். அந்த பொம்மைகள் போல் இருக்கிற தேகத்தையுடைய எல்லா பிராணிகளையும் உள்ளேயிருந்து ஒருத்தன் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான். அவன் ஆட்டுகிறதனால் தான் இவை ஆடுகின்றன. அந்த ஈச்வரன் தான் எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருத்தேசத்திலும் இருக்கிறான் என்று கண்ணபிரான் உபதேசம் செய்கிறார்.

## 101

அத்வைதமான ஒரு தத்துவம் அநேக விதமாக அனுக்ரஹம் செய்வதற்காகத் தன்னுடைய மாயா சக்தியினால்

த்வைதமாகிறது. நாம் கண், காது போன்ற பொறிகளை உடையவர்கள். ஆதலினால் நமக்கு ஆனந்தத்தைக் கொடுக்க உருவம் உடையதாக நாமரூபம் உடையதாக வருகிறது, எங்கும் நிறைந்திருக்கும்படியான அந்த வஸ்து இப்படிக் குறையுடையதுமல்ல. அது அநந்தம், நிராகார மான வஸ்து. நமக்கு அனுக்ரஹம் பண்ணுவதற்காக ஆகாரம் (ரூபம்) உடையதாக வருகிற அது தான் மாயை. "லீயே புரஹரஜாயே மாயே தவதருணபல்லவச் சாயே சரணே" என்று மூககவி ஆர்யா சதகத்தில் சொல்லுவது போலவே ஆசார்யர்கள்

> "மனஸ்த்வம் வ்யோம த்வம் மருதஸி மருத்ஸாரதிரஸி
> த்வமாபஸ்த்வம் பூமிஸ்த்வயி பரிண தாயாம் நஹி
> பரம்"

எல்லா வஸ்துவும் உன்னுடைய பரிணாமத்தைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. அல்பமான மனஸை உடைய எங்களுக்கு அனுக்ரஹம் பண்ணி ஆனந்தத்தை உண்டாக்குவதற்காக நீ எல்லாமாய் இருக்கிறாய் என்று ஸ்தோத்ரம் செய்கிறார். அந்த அம்பாளுடைய கடாக்ஷம் தான் நாம பிரார்த்திக்க வேண்டியது.

அருள்மொழிக் கோவை முற்றிற்று.

சிவம்



ஓ

## ॥ श्री चन्द्रशेखरयतीन्द्रतोटकाष्टकम् ॥
## ஸ்ரீ சந்த்ரசேகரயதீந்த்ரதோடகாஷ்டகம்

BY

Bhāshya Bhāvajna
Varahur Sri Kalyanasundara Sastrigal

विदितागमतत्त्व विबुद्धमते
रचिताखिलकर्मविशुद्धगते ।
सततामजिताखिलदेवतते
भव चन्द्रशेखर मे शरणम् ॥ १ ॥

*விதிதாகமதத்வ விபுத்தமதே*
*ரசிதாகிலகர்ம விசுத்தகதே*
*ஸததாபஜிதாகிலதேவததே*
*பவ சந்திரசேகர மே சரணம்* (1)

*நான்கு வேதங்கள் ஆறு வேதாங்கங்கள் அறுபத்து நான்கு கலைகள் போன்ற யாவற்றினும் உட்கருத்தை உன்னிப்பாக அறிந்திருப்பவரும், 'கஷாய பக்தி: கர்மணி' என்பது போன்ற வேதவிதியை யனுஸரித்துத் தாங்கள் செய்ய வேண்டிய கடமைகள் யாவற்றையுஞ் செய்து தெளிந்த நுண்ணறிவைப் பெற்றிருப்பவரும், 'பக்திர் ஞானய கலபதே' என்பதைத் தழுவி பாகுபாடு அற்ற நிலையில் ஸகல தேவதா ஸ்வரூபங்களையும் ஒன்றாகவே மதித்து எப்பொழுதும் ஸேவித்து வருபவருமான ஸ்ரீ சந்த்ரசேகர ஸத்குருவே தாங்கள் தான் எனக்கு அடைக்கலம்.*

अटिताखिलमध्यमलोक गुरो
त्रुटिताखिलदोष गुणाकर ते ।

हृदये कलये विमलं चरणं
भव चन्दिरशेखर मे शरणम् ॥ २ ॥

அடிதாகிலமத்யமலோக குரோ
த்ருடிதாகில தோஷ குணகர தே
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவ சந்திரசேகர மே சரணம் (2)

கால்நடையாகவே புண்ய பூமியான பாரதம் முழுமையும் சுற்றிவருபவரும் ஜகத்குருவாயுள்ளவரும் காமம் க்ரோதம் என்பது போன்ற எல்லா தோஷங்களையும் அறவே ஒழித்திருப்பவரும், அமானித்வம் அதம்பித்வம் என்பது போன்ற எல்லா நற்குணங்களையும் பூரணமாகப் பெற்றிருப்பவரும் ஆன தங்களுடைய புனிதமான சரணங்களை என் மனதில் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறேன். தாங்கள் தான் எனக்கு அடைக்கலம்.

भवरोगविदूनजनावन भो
भवपूजनपावनमानस ते ।
हृदये कलये विमलं चरणं
भव चन्दिरशेखर मे शरणम् ॥ ३ ॥

பவரோக விதூநஜநாவந போ
பவபூஜனபாவன மானஸ தே
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவ சந்திரசேகர மே சரணம் (3)

ஸம்ஸாரமெனப்படும் பெரிய வியாதியால் மிகவும் வாட்டமுற்றிருக்கும் ஜனங்களை நல்லுரை யென்ற மருந்தைக் கொடுத்துக் காப்பாற்றிவருபவரும் பரமேச்வரனின் மூர்த்திபேதமான சந்த்ரமௌளீச்வரரை இடையறாது பூஜிப்பதால் பிறரையும் பரிசுத்தமாக்கவல்ல மனதைப் பெற்றிருப்பவருமான தங்களுடைய புனிதமான சரணங்

களை என் மனதில் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறேன். தாங்கள் தான் எனக்கு அடைக்கலம்.

कलिदोषनिराकरणार्हमते
करुणाचितसज्जनलोकतते ।
कुरु मां भवदुःखविहीनहृदं
भव चन्द्रशेखर मे शरणम् ॥ ४ ॥

கலிதோஷ நிராகரணார்ஹமதே
கருணாவித ஸஜ்ஜனலோகததே
குரு மாம் பவதுக்க விஹீநஹ்ருதம்
பவ சந்திரசேகர மே சரணம் (4)

கலியினால் ஏற்படும் ஸகலவிதமான தோஷங்களையும் விலக்கவல்ல கூர்மையான புத்தியையுடையவரும், ஸாது ஜனங்களுக்கு ஏற்படும் துன்பங்களை விலக்கி அவர்களைக் கருணையினாலேயே காப்பாற்றிவருபவருமான தாங்கள் ஸாம்ஸாரிகமான துக்கங்கள் என்னை தாக்காதபடி கருணை செய்ய வேண்டும். தாங்கள் தான் எனக்கு அடைக்கலம்

भवपापदवानलखेदमिता
भवता जनता सुखिता भविता ।
शरणागतरक्षणदक्ष गुरो
भव चन्द्रशेखर मे शरणम् ॥ ५ ॥

பவபாபதவாநலகேதமிதா
பவதா ஜனதா ஸுகிதா பவிதா
சரணாகதரக்ஷண தக்ஷ குரோ
பவ சந்திரசேகர மே சரணம் (5)

ஸம்ஸாரத்தில் செய்யப்படும் கொடிய பாபமாகிய காட்டுத் தீயினால் மிகவும் தாபத்தை யடைந்துள்ள ஜீவ

ராசிகள் தங்களுடைய கருணை வெள்ளத்தினுல் தான் சாந்தியையடைய வேண்டும்." அடைக்கலம் என்று தங்களை வந்தடைந்தவர்களை ரக்ஷிப்பதில் தாங்கள் கையாளும் முறையே மிகவும் ஆச்சரியமானது. ஸத்குருவான தாங்களே எனக்கு அடைக்கலம்.

वृषपुङ्गवकेतननामक ते
तुलनामयतामिह को नु सुधीः
शरणागतवत्सल तत्त्वनिधे
भव चन्द्रशेखर मे शरणम् ॥ ६ ॥

வ்ருஷபுங்கவ கேதந நாமக தே
துலநாமய தாமிஹ கோ நு ஸுதீ:
சரணாகதவத்ஸல தத்வ நிதே
பவ சந்திரசேகர மே சரணம் (6)

வ்ருஷபத்தைக் கொடியிற் கொண்ட பரமேச்வரருடைய புண்ய நாமங்களுள் ஒன்ருன சந்திரசேகரர் என்ற பெயரையே கொண்டு விளங்கிவரும் தங்களுக்கு ஈடாக இப்பொழுது யாருமில்லை. இனியும் இருக்கக் கூடுமோ என்ற ஐயமே எனக்கு ஏற்படுகிறது. அடைக்கலம் என்று அடைந்தவர்களை அன்போடு நோக்கும் தத்வஞானியான தாங்களே எனக்கு அடைக்கலம்.

जगतामवने विहितादरणाः
कति नो विचरन्ति महामहसः ।
अहिमांशुरिवात्र भवानिति मे
धिषणा नियताजनि लोकगुरो ॥ ७ ॥

ஜகதாமவநே விஹிதாதரணா:
கதி நோ விசரந்தி மஹாமஹஸ:

அஹிமாம்சுரிவாத்ர பவாஸி மே
திஷணு ஸியதாஜஸி லோககுரோ (7)

க்ஷீணமடைந்துவரும் உலகத்தைக் காத்தருளும் நோக்கத்தில் தோன்றி வரும் பெரியோர்கள் பலர். அவர்களுள் கதிரோன் போன்று சிறப்புற்று விளங்குபவர் தாங்கள் தான் என்ற முடிவு எனக்கு ஏற்பட்டுவிட்டது.

भगवद्गुरुशङ्कर एव भवान्
अमिताखिलतद्गुणजाल विभो
भवतापक मे प्रतिभासि गुरो
भव चन्दिरशेखर मे शरणम् । ८ ॥

பகவத்குரு சங்கர ஏவபவாந்
அமிதாகிலதத்குணஜால விபோ
பவதாபக மே ப்ரதிபாஸி குரோ
பவசந்திரசேகர மே சரணம் (8)

பிறவியைப் போக்கவல்ல ஜகத்குருவான ஆதிசங்கரரின் அபரிமிதமான அற்புதமான குணவிசேஷங்களைத் தங்களிடம் அனுபவிக்கின்ற எனக்குத் தாங்கள் ஆதிசங்கரராகவே தோற்றமளிக்கிறீர்கள். தாங்கள் தான் எனக்கு அடைக்கலம்.

कल्याणसुन्दरेणेदं विहितं तोटकाष्टकम् ।
श्री चन्द्रशेखरगुरोः पदयोर्निहितं हितम् ॥

கல்யாண ஸுந்தரேணேதம் விஹிதம் தோடகாஷ்டகம்
ஸ்ரீ சந்த்ரசேகர குரோ: பதயோர் நிஹிதம் ஹிதம்

ஸ்ரீ சந்த்ரசேகர யதீந்த்ர தோடகாஷ்டகம் முற்றிற்று.

—சிவம்—

# நமது அரிய பிரசுரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் | 1968 — | 1 00 |
| 2. | ,, | 1969 — | 1 00 |
| 3. | ,, | 1970 — | 2 50 |
| 4. | ,, | 1971 — | 2 50 |
| 5. | ,, | 1972 — | 2 50 |
| 6. | ,, | 1973 — | 2 50 |
| 7. | ,, | 1974 — | 2 50 |
| 8. | ,, | 1975 — | 3 00 |

சலுகை விலை ரூபாய் 13/– நன்கொடையாக அனுப்பும் நேயர்களுக்கு மேற்கண்ட 8 மலர்களும் கைவசமுள்ள இரண்டொரு இலவச வெளியீடுகளும் சேர்த்து அனுப்பி வைக்கப்படும்.

9. ஸகலகாரிய சித்தியும் சைவத்திருமுறைகளும் (லிப்கோ பிரசுரம்) ரூ. 4 00

10. *விபூதியும் ருத்ராக்ஷமும் (பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் எழுதியது) ரூ. 0 40

11. *ஞானயோகம் (பாஷ்யபாவக்ஞ பிரம்மஸ்ரீ, வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள் எழுதியது ரூ. 0 50

12. ஸ்ரீ சங்கர பகவத்பாத விஜயம் (சிவோத்கர்ஷ வர்ஷக பிரம்மஸ்ரீ P.N. நாராயண சாஸ்திரிகள் எழுதியது) ரூ. 0 60

13. அருள்மொழிக் கோவை ரூ. 0 50

14. சிவ நாம மஹிமை ரூ. 0 60

ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர்களைத் தொடர்ச்சியாக வாங்கும் நேயர்கள் *இக்குறியிட்ட நூல்களை வாங்க வேண்டியதில்லை.

**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
மேலமாம்பலம், சென்னை–600033.

உ

சிவமயம்

# ஸ்தோத்ர கமலாகரம்

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதர்கள், ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் மற்றும் அருளாளர்கள் இயற்றியவைகளும், புராண இதிஹாஸங்களில் உள்ளவைகளுமான அரிய ஸ்தோத்ரங்கள் அடங்கியது. மூலம் நாகரம், தமிழ் ஆகிய இரு லிபிகளிலும் தமிழ் பொழிப்புரை, சில இடங்களில் விளக்க உரை உட்பட கொடுக்கப்பட்டுள்ள சிறந்த நூல். இதுவரை மூன்று பாகங்கள் வெளிவந்துள்ளன.

| | | |
|---|---|---|
| **முதல் பாகம்** | — | **ரூ. 1-50** |
| **இரண்டாம் பாகம்** | — | **ரூ. 1-00** |
| **மூன்றும் பாகம்** | — | **ரூ: 2-25** |

தபால் செலவு பிரதி 1 க்கு 10 காசுகள்.

மூன்று பாகங்களும் சேர்ந்து ஒரே சமயத்தில் வாங்குபவர்க்குச் சலுகை விலை ரூபாய் 4-00.
தபால் செலவு 25 காசுகள்.

குறிப்பு: நமது **ஸ்ரீ** சங்கர ஜயந்தி மலர்களைத் தொடர்ச்சியாக வாங்கும் அன்பர்கள் ஸ்தோத்ர கமலாகரம் என்னும் நூல்களை வாங்க வேண்டியதில்லை.

பதிப்பாசிரியர் :

**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**

5, டெலிபோஸ்ட் காலனி : குறுக்குத்தெரு

**மேலமாம்பலம் — சென்னை-600033**

Printed at Ramayana Printing Works, Madras-4.